# பிரவுன் & போல்ஸன் கஸ்டர்டு பவுடர் வழங்கும் தீஞ்சுவையுள்ள 'திடீர்த் தயாரிப்பு.'

## 'போரிங்' கஸ்டர்டு

புரூட் ஸலாட், கேக், ஜெல்லி ஆகியவற்றுக்கு சுவையூட்டுங்கள், அதன் மீது கஸ்டர்டை ஊற்றுங்கள். 'போரிங்' கஸ்டர்டு தயாரிக்க: **1½ தேக்காண்டி பிரவுன் & போல்ஸன்** கஸ்டர்டு பவுடர், 3 தேக்காண்டி சர்க்கரை மற்றும் சிறிது குளிர்ந்த பால் எடுத்துக் கொள்ளுங்கள். கூழாகும் வரை கலக்கிக் கிளறுங்கள். ஒரு கோப்பை பாலை சூடாக்கி, கஸ்டர்டு பவுடர் கலவையை அதில் சேர்த்து விடுங்கள். கொதிக்கும் வரை கிளறுங்கள். சூடாகவோ, குளிர்ந்ததாகவோ பரிமாறுங்கள்.

அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்தோடு பக்குவப்படுத்தப்பட்டதால், கஸ்டர்டு பவுடர்களிலேயே மிகச் **சிறந்தது பிரவுன் & போல்ஸன்.**




முட்டை கலவாதது.



**கார்ன் பிராடக்ட்ஸ் கோ. (இந்தியா) பிரை.லிட்.**
ஸ்ரீநிவாஸ் ஹவுஸ், எச். சோமானி மார்க், பம்பாய் 400 001.

OBM/5469 TM



# கல்கி

அநல ஹு
சித்திரை 20

o

மே 2
1976

o

"கல்கி"யில் வெளியாகும் கதைகளிலுள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே;

## அரசியல் வாதிகள்

அரசியல் வாதிகள்—
பால்காரர்கள்...

ஜனநாயகக் கன்றின் தோலில்
வாக்குறுதி வைக்கோலைத்
திணித்துக் கட்டி
தேசப் பசு மடியில்
தேர்தல் பால் கறக்கும்...

அரசியல் வாதிகள்—
பால்காரர்கள்...

காம்புகள் வற்றிப் போனால்
கொம்பிலும் பால்கறக்கும்...

அரசியல் வாதிகள்—
பால்காரர்கள்...

—நா. குமாரஸ



# குஷி மனிதர் குஷ்வந்த்சிங்

கிண்டி ஆளுநர் மாளிகை.

திரு குஷ்வந்த் சிங் தங்கியிருந்த விருந்தினர் அறைக்குள் நான் நுழைந்ததும் 'வில்லனை' அடித்து வீழ்த்திய 'ஸ்டண்டு'ப் பட ஹீரோ மாதிரி பெருமிதத்துடன் அவர் கையைக் குலுக்கி என்னை அறிமுகப்படுத்திக் கொண்டேன்.

அப்படி நான் பெருமைப்பட்டதற்குக் காரணம் உண்டு. மூன்றரை மணிக்கு எனக்கு அவர் பேட்டி தருவதாகச் செய்தி கிடைத்த போது மணி இரண்டரை. அவசரம் அவசரமாக ஓடி ஒரு டாக்ஸி பிடித்து, ''ராஜ்பவனுக்குப் போ'' என்று கூறிவிட்டு 'குஷ்வந்த் சிங் அவர்களை என்ன கேள்விகள் கேட்கலாம' என்று சிந்திக்க ஆரம்பித்தேன். சிந்தனையிலிருந்து ஒரு கட்டத்தில் நான் மீண்டு பார்த்த போது டாக்ஸி வேறு திசையில் போய்க் கொண்டிருந்தது! திடுக்கிட்டு விசாரித்தால், ''நீங்கதானே ஜாம்பஜார் போகச் சொன்னீங்க?'' என்றார் டிரைவர். 'ராஜ்பவனுக்குப் போக இவருக்கு என்ன அருகதை என்று நினைத்தாரோ' அல்லது அவர் காதில் நான் சொன்னது 'ஜாம்பஜார்' என்றுதான் விழுந்ததோ தெரியவில்லை.

''திரும்பு, திரும்பு! ராஜ்பவன்!'' என்று அலறினேன், நேரமாகி விட்டதே என்ற கவலையில். டாக்ஸி விரைந்தது. சூப்பர் மார்க்கெட் எதிரே ரிப்பேர் ஆகி நின்றும் விட்டது! அவருக்குக் கணக்குத் தீர்த்து விட்டு வேறு டாக்ஸி பிடித்து போய்ச் சேரும்போது மணி மூன்று இருபத்தெட்டு. கால அசுரனை வென்று வீழ்த்திய திருப்திப் பெருமிதம் எனக்கு.

அந்தப் பெருமிதம் நீண்ட நேரம் நிலைக்கவில்லை. முதல் இரண்டு மூன்று நிமிஷம் பொதுவாகத் தமிழ் பத்திரிகை உலகைப்பற்றிக் கேட்ட குஷ்வந்த் சிங் அடுத்தாற்போல், ''நீங்கள் சமீபத்தில் பார்த்த தமிழ் படத்தைப்பற்றிச் சொல்லுங்களேன்'' என்று ஆரம்பித்தார். ''உங்கள் ஹீரோக்களில் யார் ரொம்பப் பிரபலமானவர்?'' என்று கேட்டார்!



'இது என்ன? யார் யாரைப் பேட்டி காண்கிறார்கள்?' எனக்கு ஒரே குழப்பம்.

அதைப் புரிந்துகொண்டவராக அவர், ''நியூயார்க் டைம்ஸ் பத்திரிகைக்கு நான் ஒரு நிருபர். அதற்குத் தமிழ் சினிமாத்துறையைப் பற்றி ஒரு கட்டுரை எழுத வேண்டும்! கதாநாயகிகளில் யாரைச் சந்திக்கலாம் என்று சொல்லுங்களேன்!'' என்றார்.

'அடி சக்கை! தமிழ் சினிமா பற்றி நியூயார்க் டைம்ஸுக்கே அக்கறை பிறந்து விட்டதா? அப்படியானால் நம்மால் முடிந்த உதவியைச் செய்ய வேண்டியது தான்' என்ற தீர்மானத்துடன் பேச ஆரம்பித்தேன்.

இரண்டு மூன்று நாட்களுக்கு முன், மாக்ஸ் முல்லர் பவனில், 'தமிழ் சினிமாத்'துறையிலுள்ள பிரச்னைகள்' என்பது பற்றி இரண்டு பிரபல தயாரிப்பாளர்கள் பேசிய நிகழ்ச்சிக்கு நான் போயிருந்தேன். அவர்கள் பேச்சில் அடிபட்ட சில விஷயங்களை அஸ்திவாரமாகக் கொண்டு வெளுத்து வாங்கினேன்.

இடையே தேநீர் வந்தது. அதைத் தொடர்ந்து ராஜ்பவன் சிப்பந்தி ஒருவர் வந்து 'கார் ரெடி' என்று அறிவித்தார்.

கைக் கடிகாரத்தைப் பார்த்தேன். மணி நான்கு. நான் வந்த விஷயம் இன்னும் ஆரம்பமே ஆகவில்லை. இவர் கிளம்பி விட்டாரே!

நல்ல வேளை. குஷ்வந்த் சிங் ''வாருங்கள்! நாம் காரிலே போய்க் கொண்டே பேசுவோம்'' என்றார். காரோட்டியை, மௌண்ட் ரோட் ஓரியண்ட் லாங்மென்ஸ் புத்தக நிறுவனத்துக்குப் போகச் சொன்னார்.

அந்த நிறுவனத்தின் டைரக்டர்களில் அவரும் ஒருவர். இங்கு வந்த நேரத்தில் அந்தக் கிளையையும் பார்க்கலாம் என்ற ஆசை.

போகும் வழியில் தமிழில் வெளியாகும் புத்தகங்களைப் பற்றிப் பேச்சு வந்தது. அந்தப் பேச்சு முடிவதற்கு முன் நாங்கள் இறங்க வேண்டிய இடம் வந்து விட்டது.

அங்கே அரை மணி நேரம் இருந்தார். புதிதாக வெளியாகியிருக்கும் இரண்டொரு புத்தகங்களை வரவழைத்துப் பார்த்தார்.

அங்கிருந்து கிளம்பி முகப்புக்கு வந்த போது ராஜ்பவன் காருக்கு உஷ்ணக் கோளாறு. கிளம்ப மறுத்தது. ''சரி, நாம் இப்படியே நடந்து ஹிக்கின்பாதம் புத்தகசாலை வரை போவோம். காரைச் சரி செய்து கொண்டு அங்கே வரட்டும்'' என்றார். இருவரும் நடந்தோம்.



இதற்குப் பதில் சொல்வதற்குப் பதில் அங்கே நிறைய அடுக்கி வைக்கப்பட்டிருந்த 'நள்ளிரவில் சுதந்திரம்' புத்தகப் பிரதிகளைச் சுட்டிக் காட்டினேன். நாற்பத்தி ஐந்து ரூபாய் விலையுள்ள பெரிய புத்தகம் அது.

''இந்தப் புத்தகம் இந்தியாவில் நிறைய விற்பதற்குக் காரணமே நீங்கள்தான்! உங்கள் 'வீக்லி'யில் இந்தப் புத்தகத்தின் குறைபாடுகளைச் சுட்டிக் காட்டப் போக, நீங்களே ஒரு விளம்பரச் சாதனமாக மாறிவிட்டீர்கள்'' என்றேன்.

''நான் ஓர் அசட்டுத்தனம் செய்து விட்டேன்'' என்று அவர் ஆரம்பித்து விவரித்தார்.

கோமதி ஸ்வாமிநாதன்





இலக்கிய சிந்தனை ஆண்டு விழாவில் தலைமை தாங்கி, தற்கால இந்திய இலக்கியம் பற்றி உரையாற்ற சென்னை வந்தார் திரு குஷ்வந்த் சிங். மேடையில் 1975ம் ஆண்டின் தமிழ் சிறுகதைகளை ஆய்வு செய்த ஸ்ரீமதி ராஜம் கிருஷ்ணன், திரு குஷ்வந்த் சிங், மேனாட்டு நவீன பாணி நாடகங்கள் பற்றிப் பேசிய திரு புவியரசு. மைக்கில் பேசுபவர்கள் இலக்கிய சிந்தனை அமைப்பாளர்கள் திரு லக்ஷ்மணன், திரு சிதம்பரம்.

வழியிலே முதலில் தென்பட்டது 'கென்னடி புக் ஸ்டால்'. அன்று பிற்பகலில் வந்த 'இல்லஸ்ட்ரேட்டட் வீக்லி'யின் சமீப இதழை அடுக்கி வைத்திருந்தார்கள். அந்தக் கடைக்காரரிடம் 'வீக்லி'க்கு உள்ள வரவேற்பைப் பற்றி விசாரித்தார். அவர், 'வீக்லி குறிப்பிட்ட தேதிகளில், கிழமைகளில் வருவதில்லை. ஒரு வாரம் சனிக்கிழமை வருகிறது. ஒரு வாரம் திங்கட்கிழமை வருகிறது. இதனால் வியாபாரமும் பாதிக்கப்படுகிறது' என்றார்.

''அப்படியா? நாங்கள் பம்பாயிலிருந்து குறிப்பிட்ட கிழமைகளில் அனுப்பி விடுகிறோம். இந்த முனையில்தான் ஏதோ கோளாறு. நான் அதை விசாரிக்க ஏற்பாடு செய்கிறேன்'' என்றார் திரு சிங். இப்போதுதான் கடைக்காரருக்கு விசாரணை செய்யும் தாடிக்காரர் யாரென்று புரிந்தது.

அடுத்தாற் போல் 'புக் சென்டர்'. இங்கும் நுழைகிறோம். பல புத்தகங்களைக் கையில் எடுத்துப் பார்த்தார். ''இங்கு 'பேப்பர் பாக்' புத்தகங்கள் விற்பனைதான் நிறைய இருக்கும் போலிருக்கிறதே! ஏன்?'' என்றார்.

இந்தப் புத்தகத்தில் எத்தனையோ குறைபாடுகள். அவற்றைச் சுட்டிக் காட்டும் நோக்கத்தில் 'அதைப் பற்றி இவர் எழுதவில்லையாம். இவருக்குப் பிடிக்காத சில நபர்களைப் பற்றி அந்தப் புத்தகத்தின் இரட்டை ஆசிரியர்கள் சில பகுதிகளை எழுதி யிருக்கிறார்கள். அவற்றை வெளிப்படுத்தி ஒருவித கொடூர திருப்தியடைய சில பகுதிகளை 'வீக்லி'யில் வெளியிட்டாராம்.

இவரைப் பொறுத்த வரையில் நள்ளிரவில் டெலிபோன் மூலம் வன்முறை மிரட்டல்களும், வழக்குத் தொடுப்பதாக மிரட்டல்களும் வந்ததுதான் லாபம். பதிப்பாளர்களுக்கோ, பல்லாயிரக்கணக்கில் இந்தப் புத்தகம் விற்பது லாபம்!

'புக் சென்டரை' விட்டு 'ஹிக்கின் பாதம்ஸ்' புத்தக நிறுவனத்துக்கு நடந்தோம்.

'ஹிக்கின்பாதம்ஸ்' திரு குஷ்வந்த் சிங்குக்குப் பிரமிப்பை அளித்தது. ''இந்த மாதிரி புத்தக வியாபார நிறுவனம் பம்பாய், டில்லி, கல்கத்தா நகரங்களில் கூடப் பார்த்ததில்லை'' என்று இரண்டு மூன்று தடவை திருப்பித் திருப்பிச் சொன்னார்.

ஆங்கிலத்தில் எழுதும் இந்திய ஆசிரியர்களுக்கு என்று ஒரு தனிப் பகுதி. அதில் அவர் எழுதிய நவீனங்களும் இடம் பெற்றிருந்தன. அதைப் பார்த்துக் கண்களைச் சிமிட்டினார்.

''நிற வேற்றுமை உணர்ச்சிதான் நினைவு வருகிறது. ஆங்கிலத்தில் எழுதினாலும், மேலை நாட்டு ஆசிரியர்களும், இந்திய ஆசிரியர்களும் இந்தக் கட்டடத்தில் பிரிந்து நிற்கிறார்கள்'' என்றேன்.

அதை ரசித்து என் முதுகில் தட்டிக் கொடுத்தார்.

'ஹிக்கின்பாதம்ஸ்' நிர்வாகியைச் சந்தித்துப் புத்தகங்கள் திருடு போகாமல் இருக்க என்ன வழிமுறைகள் கையாளப்படுகின்றன என்று கேட்டுத் தெரிந்து கொண்டார்!

வெளியே வந்து காரில் அமர்ந்தோம். ''சிலைகள் நிறைந்த கடற்கரை வழியாகக் காரைக் கொண்டு போகச் சொல்லுங்கள்'' என்றார். ஒவ்வொரு சிலையாக விளக்கம் கேட்டார். இடையே அரசியல் கேள்விகள்.

காந்தி சிலை முன் இறங்கிச் சற்று மணற் பரப்பில் நடந்து விட்டு மீண்டும் ராஜ்பவனத்தை அடைந்த போது மணி ஆறேகால்.

''எனக்குத் தினம் கொஞ்சம் நடந்து பழக்கம். வாருங்கள்! ராஜ்பவனத் தோட்டத்தில் நடக்கலாம்'' என்றார். இவ்வளவு நடந்தும் மனுஷனுக்குப் போதவில்லையா? என் கால்கள் கெஞ்சின. தோல்வியை ஒப்புக் கொள்ள மனம் வரவில்லை. நடந்தேன்! இப்போது தென்னிந்திய பாணி திருமணங்கள், முன்னேற்பாடுகள் முதலியவற்றைப் பற்றிப் பல கேள்விகள் தொடுத்து என்னிடமிருந்து பதில்களை வரவழைத்தார்.

ஒரு சின்னஞ்சிறு மான்குட்டி. கழுத்தைச் சாய்த்துக் கொண்டே எங்கள் பின் ஓடி வந்தது. என் முழங்காலில் அதன் நெற்றியைத் தேய்த்தது. அதைப் பிடித்துத் தழுவ அவர் முயன்றார். பிடியிலிருந்து நழுவி ஓடி விட்டது.

''என் தாடியைப் பார்த்துப் பயப்படுகிறது'' என்று சிரித்தார்.

மீண்டும் அறைக்குத் திரும்பும்போது மணி ஏழு. ''அடேடே! நீங்கள் என்னைச் சில கேள்விகள் கேட்க விரும்பி வந்திருக்கிறீர்களல்லவா? கேளுங்கள். (Shoot)'' என்றார்.

''வியாபார ரீதியாக வெற்றி பெற வாரப் பத்திரிகைகளுக்குத் தேவையான முக்கிய அம்சங்கள் என்ன?''

''செய்திகளைத் தெளிவாகச் சொல்லவும் பொழுதைப் போக்க உதவவும், சிந்தனை வேகத்தைத் தூண்டவும் (To inform, to amuse and to provocate) திறமை இருந்தால் போதும்'' என்று பதில் வந்தது.

''ஒரு லட்சிய வாரப் பதிப்புக்கான தேவைகள்?''

''கனமான விஷயங்களையும் எளிமையாக்கிப் பரிமாறினால் வெற்றி பெறலாம்.''

''நீங்கள் உங்கள் வாழ்க்கையைப் பத்திரிகையாளராகவே ஆரம்பித்தீர்களா?''

''இல்லை! சட்டம் படித்து வழக்கறிஞனாக ஆனேன். ஆனால் அந்தத் தொழில் பிடிக்கவில்லை. பிறகு 'டிப்ளமாட்டிக்' மிஷனில் ( Diplomatic mission ) சேர்ந்து இந்திய அரசின் சார்பாக இருபதாண்டு காலம் வரை வெளிநாடுகளில் பணியாற்றினேன். அப்போது நான் எழுதிய சிறுகதைகள் கட்டுரைகள் அமெரிக்க சஞ்சிகைகளில் பிரசுரமாயின. நியூயார்க் டைம்ஸ் பத்திரிகை எனக்கு ஒரு கட்டுரைக்கு ஆயிரம் டாலர்கள் கொடுக்கிறது. நாவல்களும் எழுதியிருக்கிறேன். இப்போது இல்லஸ்ட்ரேட்டட் வீக்லியில் ஆசிரியராகச் சேர்ந்தாயிற்று. அவ்வப்போது அமெரிக்கப் பத்திரிகைகளுக்கு எழுதிக் கொண்டிருக்கிறேன்.''

''எந்த மாதிரி நடையைத் தங்கள் 'வீக்லி' விரும்புகிறது?''

''மிருந்த எளிய நடை! அனாவசியமாக ஒரு வார்த்தை இருக்கக் கூடாது. விஷயத் தெளிவுக்கு மட்டுமே வார்த்தைகள் உதவ வேண்டும். விக்டோரியா கால குழப்பமான ஆங்கிலத்தை நான் விரும்பவில்லை.''

''தங்கள் வாழ்க்கையில் நடந்த சுவாரசியமான நிகழ்ச்சி?''

''1965ல் பாகிஸ்தான் யுத்தம் ஆரம்பித்த போது நியூயார்க் டைம்ஸ் பத்திரிகை, என்னிடமிருந்து பாகிஸ்தான் பற்றி ஒரு கட்டுரையை விரும்பியது. அப்போது நான் இருக்குமிடம் அந்தப் பத்திரிகை ஆசிரியருக்குத் தெரியாது. டில்லி, லண்டன், பம்பாய், பாரிஸ் என்று டெலிபோன் செய்து தேடி, கடைசியில் என்னை அமெரிக்காவிலேயே 'பிரின்ஸ்டன்' என்ற ஊரில் கண்டுபிடித்தனர். நான் அப்போது அங்கே சர்வகலாசாலையில் ஆசிரியராக இருந்தேன்.

''விஷயத்தை என்னிடம் டெலிபோனில் சொன்னார்கள். நான் மறுநாட் காலை இந்தியாவுக்குப் புறப்பட ஏற்பாடு செய்து விட்டேன். ஆசிரியரின் வேண்டுகோளைப் புறக்கணிக்கவும் விரும்பவில்லை. அன்று மாலைக்குள்ளேயே நான்காயிரம் வார்த்தைகள் கொண்ட கட்டுரையை எழுதி முடித்துச் சுமார் ஒன்றரை மணி நேரம், வெகு தொலைவிலுள்ள பத்திரிகைக் காரியாலயத்துக்கு டெலிபோன் மூலமே, 'டிக்டேட்' செய்தேன். அவர்கள் அதைஎடிட் செய்து அன்று இரவு மீண்டும், டெலிஃபோனிலேயே எனக்குப் படித்துக் காண்பித்தார்கள். டெலிபோனுக்கு மாத்திரம் அன்று ஏராளமாய்ச் செலவழிந்திருக்கும். ஆனாலும் நான் கட்டுரையை எழுதிக் கொடுத்து விட்ட ஆனந்தத்தை மறக்க மாட்டேன்.''

'' 'வீக்லி' இளைஞர்களிடமிருந்து வரவேற்பைப் பெறுகிறதா?-வயதானவர்களிடமிருந்து வரவேற்பைப் பெறுகிறதா?''

''நான் போகும் இடங்களில் பல கலாசாலை இளைஞர்கள் வீக்லியில் வந்த விஷயங்களைப் பற்றி என்னிடம் விவாதம் செய்கிறார்களே!... ஆனாலும், மூன்று லட்சம் பிரதிகளில் இரண்டு லட்சம் பெரிய நகரங்களில் தான் விநியோகமாகின்றன. சிறிய ஊர்களையும் அது எட்ட வேண்டும்.''

கடிகாரம் மணி ஏழரையைக் காண்பிக்கிறது. அவருக்குச் சற்று ஓய்வு தேவை என்று நான் உணர்கிறேன். விடைபெறுகிறேன். ஆனால் அவர் ராஜபவன் வெளி கேட் வரை கூடவே நடந்து வந்து நான் டாக்ஸி பிடித்த பிறகு கையை ஆட்டி விட்டுத்தான் உள்ளே போகிறார்.

# லக்மே லவெண்டர் டால்க்

## கொஞ்சி மணக்கும்...
## பிரெஞ்சு மயக்கம்.

தரித்துக் கொள்வீர்
லக்மே லவெண்டர் டால்க்.
பூத்த புது பிரெஞ்சு
லவெண்டர் பூக்களின்
நேர்த்தியான மணம்.
லக்மே லவெண்டர் டால்க்

**உங்கள் எழில்:**
**எங்கள் தொழில்.**




dCA/L-VC-LT/1N TAM

OBM-5254 TM

ரவிக்குக் காயம்
படும்போது



# ரவியின் அன்னை, நோய் தொற்றாமல் அவனைப் பாதுகாக்க, BAND-AID BRAND டிரஸ்ஸிங்குகளையே நம்புகிறார்.

காயங்கள திறந்திருந்தால் தொற்று
நோய் பரவக்கூடும். எனவேதான்,
விவேகமுள்ள தாய்மார்கள், காயங்-
களைப் பாதுகாத்து ஆற்றுவதற்கு
பாண்டு-எய்ட் பிராண்ட் டிரஸ்ஸிங்கு
களை மட்டுமே நம்புகிறார்கள்.
பாண்டு-எய்ட் பிராண்ட் டிரஸ்ஸிங்கு-
கள் நோய்க் கிருமி தொற்றாமல்
காயங்களைக் காக்கின்றன. அவற்-
றிலுள்ள நிருபணமான ஆன்டிசெப்டிக்
மருந்து மெர்க்கியூரோக்ரோம்,
பிளவுபட்ட சருமத்துக்கு இதமளித்து
ஆற்ற உதவுகிறது.

பாண்டு-எய்ட்
பிராண்ட்
டிரஸ்ஸிங்குகளை
ஜான்ஸன் & ஜான்ஸன்*
மட்டுமே தயாரிக்கிறார்கள்.

*Johnson & Johnson**

மெர்க்கியூரோக்ரோம்
மருந்து கலக்கப்பட்டது.



# அரசியல் சாஸன அரைகுறை டாக்டர்கள்!

நமது அரசியல் சாஸன அரைகுறை டாக்டர்கள் ஏற்கனவே சாஸனத்தின் மீது சில ஆபரேஷன்களைச் செய்து பார்த்துவிட்டார்கள். இதன் விளைவாக ஒரு விரல், ஒரு காது போன்ற சில அவயவங்களைச் சாஸனம் இழந்துவிட்டது!

அதெல்லாம் இந்த அரைகுறை டாக்டர்களுக்குப் போதவில்லை. பெரிய ஆபரேஷனுக ஏதாவது செய்து பார்க்க ஆசைப்படுகிறார்கள்!

''சாஸனத்துக்கு இப்போதுள்ள தலை அழகாயில்லை, அதை எடுத்துவிட்டு வேறு கம்பீரத் தோற்றமுடைய தலையை வைத்துப் பார்ப்போம்'' என்றனர் சிலர்.

நல்ல வேளை, நமது பிரதமர், இப்போதுள்ள தலையே போதுமானது என்றார். பாராளுமன்ற அமைப்பு பிழைத்தது. ஜனாதிபதி பாணி ஆட்சி முறை தேவை இல்லை என முடிவாயிற்று.

ஆனால் சாஸன டாக்டர்கள் ஓர் இதயமாற்று ஆபரேஷனை இல்லாத போனால் குறைந்தபட்சமாக ஒரு சிறு நீரகத்தை நீக்கும் ஆபரேஷனை செய்தே தீருவது என்று கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறார்கள். 'ஆபத்தான ஆபரேஷன்களை அவசியமானால் செய்ய வேண்டியதுதான் ; ஆரோக்கியமான நிலையில் தேவையா?' என்றால் கேட்கமாட்டேனென்கிறார்கள். ஒரே பிடிவாதம். அவர்கள் கை பரபரக்கிறது!

'நாடாளுமன்றமே உயர்ந்தது ; அது சாஸனத்தில் செய்யும் மாறுதல்களை விசாரிக்க எந்த நீதிமன்றத்துக்கும் அதிகாரம் இருக்கக் கூடாது' என்பது இவர்கள் கொண்டு வரவிருக்கும் ஒரு சாஸன மாறுதல். சுவரண் சிங் கமிட்டி இத்துடன் இன்னொரு யோசனையையும் தெரிவித்திருக்கிறது :

நாடாளுமன்றமோ சட்டமன்றங்களோ இயற்றுகிற எந்தச் சட்டத்தையும் அரசியல் சாஸனத்துக்கு விரோதமானதா என்று பரிசீலிக்கும் உரிமை உயர்நீதி மன்றங்களுக்கு இருக்கக் கூடாது. அந்த உரிமையைச் சுப்ரீம் கோர்ட் மட்டுமே பெற்றிருக்கலாம். அங்கேயும் சட்டமன்றம் அல்லது நாடாளுமன்றம் செய்தது தவறு என்பதைப் பெரும்பான்மை நீதிபதிகள் கூறினால் போதாது. மூன்றில் இரண்டு பங்கு நீதிபதிகள் கூற வேண்டும்! — இப்படி உலகெங்கும் தேடினாலும் கிடைக்காத ஒரு புது முறையைச் சிபாரிசு செய்கிறது சுவரண்சிங் கமிட்டி.

இதைத் தவிர, அரசாங்கத்தின் வருவாய்த் துறை, நிலச் சீர்திருத்தம், தானியக் கொள்முதல் — விநியோகம், தேர்தல் விஷயங்கள் ஆகிய அம்சங்கள் மீது நீதிமன்றங்களில் மக்கள் 'ரிட்' மனு தாக்கல் செய்யும் உரிமை பறிக்கப்படும்.

இதுபோன்ற இன்னும் பல விபரீத ஆபரேஷன்களைச் சிபாரிசு செய்யும் சுவரண்சிங் கமிட்டி அறிக்கையை பருவா மேள தாளத்தோடு வரவேற்றுவிட்டார்.

பாரத நாட்டில் வோட்டுரிமை பெற்றுள்ள பாமரர்களில் பெரும்பாலோர் கல்வி அறிவே இல்லாதவர்கள். ஜனநாயக உரிமைகளை அறியாதவர்கள். கொள்கைகளைச் சீர்தூக்கிப் பார்த்துச் சிந்தித்து வோட்டு செய்பவர்கள் அல்ல. ஆளைப் பார்த்து, அல்லது சாதியைப் பார்த்து, அல்லது கைக்கு வரும் சில்லறையைப் பார்த்து வோட்டுப் போடுகிறார்கள்.

இப்படித் தேர்ந்தெடுக்கப்படும் நபர்கள் தேசத்தின் சிறந்த அறிவாளிகளாக இருக்க முடியுமா? அவ்விதமில்லாதபோது அவர்களிடம் நீதிமன்றத்தின் பரிசீலனைக்கு உட்படாத முறையில் அபரிமித அதிகாரங்களைக் குவிப்பது சரியா? மேலும் நாடாளுமன்றத்தில்


கல்கி

மலர் 35

இதழ் 40





தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

அங்கத்தினர்கள் மனச்சாட்சிப்படி வோட்டுப் போடுகிறார்களா? கட்சிக் கொறடாவுக்குக் கைகட்டித்தானே நிற்கிறார்கள்?

இதையெல்லாம் உத்தேசித்துத்தான் பாராளுமன்றத்தின் முடிவுகளைப் பரிசீலிக்கும் உரிமையைச் சுப்ரீம் கோர்ட்டுக்கு அரசியல் சாஸனம் வழங்கியது. சாஸனத்தை உருவாக்கிய மேதை அம்பேத்கர் இதனையே அனைத்திலும் அதி முக்கியமானதாகக் கருதினார்.

ஆட்சியின் முடிவுகள் நீதிமன்றத்தின் பரிசீலனைக்கு உட்படக் கூடாதென்றால் சட்டபூர்வமான ஆட்சி முறை நடப்பதாக எவ்வாறு கூற முடியும்?

வேண்டாம் இந்த ஆபரேஷன் என்கிறோம். நீங்கள் செய்யப் போவது சஸ்திர சிகிச்சை அல்ல; விபரீத பரிசோதனை!

# மூஷிகர் பதில்கள்!



விநாயகர் ஒரு கற்றை நாளிதழ்களை அருகே வைத்துக் கொண்டு படித்தபடி இருந்தார். ''சரக், சரக்'' என்று சத்தம் கேட்டது. கோபத்துடன் திரும்பினார். மூஷிகர் தாம் ருசித்துக் கொண்டிருந்த பத்திரிகையை விட்டு விட்டுப் பயபக்தியுடன் கைகட்டி நின்றார்.

மூஷிகர்: ஹி....ஹி.... நீங்கள் படித்து ருசிக்கிறீர்கள்; நான் ருசித்துப் புசிக்கிறேன்!

● விநாயகர்: கவனித்தாயா, கலைஞர் ரொம்ப 'பிஸி'. ஏகப்பட்ட கல்யாணங்களை நடத்தி வைத்துக் கொண்டிருக்கிறார்....

மூஷிகர்: பெரிய 'கல்யாணம்' ஒன்று ஒரு மாதம் ஒத்திப் போடப்பட்டு விட்டதல்லவா?

● விநாயகர்: புதிய இறக்குமதி கொள்கையின் விளைவாக, திரைப்படத் தொழில் வெகுவாகப் பாதிக்கப்பட்டுள்ளதாக சுந்தர்லால் நாஹாதா அங்கலாய்க்கிறாரே?

மூஷிகர்: திரைப்படத் தொழிலினால் மக்களின் மன ஆரோக்கியம் பாதிக்கப்பட்டுள்ளதைவிடவா?

● விநாயகர்: ஸ்ரீமதி முகர்ஜி தமிழக விஜயத்தின் போது புது காங்கிரஸ் தனியாகவே தேர்தலில் போட்டியிடத்தான் விரும்பும்; ஆனால் எதிர்காலத்தில் அ. இ. மு. க.வுடன் உடன்பாடு செய்து கொள்வது பற்றி இப்போது ஏதும் சொல்வதற்கில்லை என்கிறாரே?

மூஷிகர்: பாலுக்கும் காவல், பூனைக்கும் தோழன்.

● விநாயகர்: ஏராளமான கோதுமையும் அரிசியும் பி. எல். 480 திட்டத்தின்கீழ் அமெரிக்காவிலிருந்து இங்கே வரப் போகிறது. நீண்ட காலக் கடனில் குறைந்த வட்டி விகிதத்தில் அனுப்புகிறார்கள்....

மூஷிகர்: வரட்டும், வரட்டும். நன்றாகச் சாப்பிட்டால்தானே அமெரிக்காவை மேலும் இழித்துரைக்க பலம் பெறலாம்!

● விநாயகர்: இந்துக்களுக்கும் சீக்கியர்களுக்கும் இடையில் விரோத பாவம் வளருமாறு வடமேற்கு எல்லைப்புறத்தில் பாகிஸ்தான் ரேடியோ பிரசாரம் அதிகரித்திருக்கிறதாம். குஷ்வந்த்சிங் எழுதியிருக்கிறார்....

மூஷிகர்: சீக்கியர்கள் ஒவ்வொருவரும் தங்கள் சிண்டை முடிந்து கொண்டவர்கள். பாகிஸ்தானின் சிண்டு முடிகிற விவகாரம் அவர்களிடம் செல்லுபடியாகாது!

● விநாயகர்: இந்திய எல்லைப் பாதுகாப்பு அணியினர் மீது பங்களா தேச ராணுவம் துப்பாக்கிப் பிரயோகம் செய்திருக்கிறதே?

மூஷிகர்: உள்நாட்டிலேயே ஒருவரை ஒருவர் சுட்டு வீழ்த்திக் கொண்டதில் அவர்களுக்கு அலுப்பு ஏற்பட்டுவிட்டதோ என்னமோ? எப்படியானாலும் உள்நாட்டுப் பிரச்னைகளிலிருந்து கவனம் திருப்பும் இந்த முயற்சியில் பங்களா தேச மக்கள் ஏமாந்துவிட மாட்டார்கள்!

● விநாயகர்: ஏராளமாகக் கொள்முதலான தானியங்களை எங்கே சேமிப்பது என்று புரியாமல் இந்திய உணவு கார்ப்பொரேஷன் தவிக்கிறதே?

மூஷிகர்: சரியாகப் பாதுகாக்கப்படாத அந்தத் தானியங்களை மக்கள் உண்ண நேரும் போது அவர்கள் அடையும் தவிப்பு இன்னும் அதிகமாகவே இருக்கும்!

● விநாயகர்: கழுதைகள் வானொலி கேட்டு ரசிப்பதாக உ.பி. அமைச்சர் ஒருவர் கூறியுள்ளாரே?

மூஷிகர்: நல்ல வேளை, கழுதைகள்தாம் வானொலி கேட்டு ரசிக்கின்றன என்று கூறாமல் விட்டாரே! அந்த மட்டில் அ. இ. ரே. அவருக்கு நன்றி செலுத்தலாம்!




எப்படி என் மாடர்ன் ஆர்ட்!
பருவா
ஸ்வரண் சிங் ஓவியப் பள்ளி
அரசியல் சாசனம் (மாற்றப்பட்டால்)


பங்களா தேஷ்
பங்களா தேஷுக்காகப் பாரத வீரர்களின் உயிர்த்தியாகம்


கோயில் நிர்வாகத்தில் தி.மு.க. ஒழுங்கீனம் பற்றி விசாரணை நடக்கும்!
உண்டியல்லே துண்டு போட்ட ஆள் இருக்காணுங்க!
விசாரணை

# குவாலியர் ரேயானின் மகத்தான 26 ஆண்டு காலப் பணி





## தன்வலிமை பெறும் கனவை நனவாக்கி வரும் பணி.

ரேயான் துணிகள், ஸ்டேபிள் இழை, ரேயான்-கிரேடு பல்ப் (கூழ்), ரேயான் ஸ்டேபிள் நூலிழைத் தொழிற்சாலைகளுக்கான எந்திர சாதனங்கள் ஆகிய எல்லாவற்றையும் நம் நாட்டிலேயே உற்பத்தி செய்து கொள்வதற்கென குவாலியர் ரேயான் செய்துவரும் முயற்சிகள், நாடு சுதந்திரம் எய்திய நாளிலேயே தொடங்கிவிட்டன.

மூங்கில் மற்றும் இதர கெட்டி மரங்களிலிருந்து கரை திறனுள்ள ரேயான்-ரகக் கூழ் தயாரிப்பு, மற்றும் ரேயான், பல்ப், இவை சார்ந்த தொழிற்சாலைகள் ஆகியவற்றுக்கான நுட்பநவீனமான எந்திர சாதனங்களின் உற்பத்தி முதலியவற்றிலே குவாலியர் ரேயான் முன்னோடியாக விளங்குவதனால், ரேயான் தொழிலிலே நம் நாடு தன்வலிமை பெற வழியமைந்துள்ளது.

இன்று, குவாலியர் ரேயானின் ஸ்டேபிள் நூலிழை உற்பத்தியளவு, 520 லட்சம் பேருக்கு ஆடை வழங்கப் போதுமானதாக உள்ளது. மரக் கூழ் உற்பத்தியோ, ஆண்டு தோறும் ஒரு லட்சம் டன்களுக்கு மேல்; இது செல்லுலோஸ் இழையளவிலே கணக்கிட்டால், 5.2 லட்சம் பருத்தி பேல்களுக்கு ஈடாகும்.

கடந்த பத்தாண்டுகளில், குவாலியர் ரேயான் நம் நாட்டின் பொக்கிஷத்திற்கு, வரிகளும் தீர்வைகளுமாக ரூ. 90 கோடி செலுத்தியுள்ளதோடு, அதே காலத்தில் ரூ. 360 கோடி அந்நியச் செலாவணியை மிச்சப்படுத்தியுள்ளது; இதை நோக்கும்போது, தன்வலிமை வாய்ந்த பொருளாதார அமைப்புக்கு குவாலியர் ரேயான் செலுத்திவரும் மகத்தான பணியின் பெருமை தெளிவாக விளங்கும்.

**குவாலியர் ரேயான்—**
**தேச முன்னேற்றமே முதன்மை எனக் கருதுவோர்.**

தி குவாலியர் ரேயான் ஸில்க் மானுபாக் (வீவிங்.) கோ. லிட்., பிர்லாகிராம், நாக்தா (ம.பி.)

# அரும்பு அம்புகள்



அமரர் **கல்கி**

### அத்தியாயம் 5

## பூட்டு திறந்தது!

பூட்டிக் கிடந்த ஒரு பழைய வீட்டின் வாசலுக்கு வந்து சேர்ந்ததும் கல்யாணசுந்தரம் காரைச் சாலை ஓரமாய் நிறுத்தினான். ''இதுதான் வீடு. ரொம்ப அதிர்ஷ்டம் பண்ணியிருக்கிறது. மதராஸ்காரர்கள் வந்து தங்குவது என்றால் சாமான்யமா ?'' என்றான்.

''ராமப்பட்டணமே அதிர்ஷ்டம் பண்ணியிருப்பதாகச் சொல்லுங்கள். சென்னையிலேயிருந்து இந்த ஊருக்கு ஏகப்பட்ட பேர் வந்து டேரா போட்டிருப்பதாகக் கூறினீர்களே!'' என்ற மாசிலாமணி, கார்க் கதவைத் திறக்கத் தெரியாமல் தவித்தார். அதே போல் பின் ஸீட்டில் காமாட்சி அம்மாளும் யாரேனும் கதவைத் திறந்துவிடக் காத்திருந்தாள். விசு, ''கார்க் கதவைத் திறக்கக் கூடவா தெரியாது?'' என்று பெரிய மனுஷ தோரணையில் கேட்டு விட்டுச் சட்டென்று இறங்கி, படீரென்று தன் பக்கத்துக் கதவைச் சாத்தினான்.

கல்யாணத்தின் காதில் அந்த ஓசை நாராசமாக விழுந்தது. முகத்தைச் சுளுக்கிக் காதுகளைப் பொத்திக் கொண்டு, ''அப்பனே, உனக்குக் கார் கதவைத் திறக்கத் தெரிகிறது; ஆனால் சாத்தத் தெரியவில்லை. கொஞ்சம் மெதுவா மூடு. என்னதான் வெள்ளைக்காரர் தயாரித்த காரானாலும் இந்தப் போடு போட்டால் தாங்காது'' என்று கூறியபடியே இறங்கினான். இதற்குள் விசு மற்றவர்கள் இறங்கக் கதவுகளைத் திறந்தான். கல்யாணம் டிக்கியைத் திறந்து விட்டு விட்டுக் காரின் கூரை மேல், காரியரில் இருந்த சாமான்களை இறக்க ஆரம்பித்தான்.

மாஜி சென்னைவாசிகள் ரொம்பக் கரிசனத்தோடு, ''நீங்கள் சிரமப்பட வேண்டாம், நாங்க இறக்கிக் கொண்டு போய் வைக்கிறோம்'' என்று உபசாரமாகச் சொன்னார்களே ஒழிய கல்யாணசுந்தரம் காரியம் செய்வதை யாரும் தடுக்கவில்லை. பெட்டியை ஒரு கையிலும் ஒரு பெரிய கூடையை மற்றொரு கையிலும் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு நடந்த கல்யாணம், பளு தாங்காததால் கூடையைத் திண்ணையின் மேல் 'ணங்'கென்று வைத்தான்.

''ஐயோ போச்சு! போச்சு! ஊறுகாய் ஜாடியெல்லாம் உடைஞ்சிருக்கும். இதற்குத்தான் அவரைத் தூக்கச் சொல்லாதே, நீ எடுத்துக்கோ என்று சொன்னேன். கேட்டியா?'' என்றாள் காமாட்சி அம்மாள் கமலாவைப் பார்த்து.

''பாதகம் இல்லை அம்மா! இவர் கார்க் கதவை விசு உடைத்ததற்கும் இவர் நம் ஊறுகாய் ஜாடிகளை உடைத்ததற்கும் சரியாய்ப் போய் விட்டது'' என்றாள் கமலா.

அவன் ஒரு பெட்டியையும் படுக்கையையும் தூக்கிக் கொண்டு வாசல் பக்கம் வந்து கொண்டிருந்தான்.

''இப்படிக் கொடு'' என்று கை நீட்டினான் கல்யாணம். ''படுக்கையை வேண்டுமானால் எடுத்துக் கொள்ளுங்கள். பெட்டி என்னதான் சீமையிலே தயாரானதானாலும் உங்களுடைய தகலடித் தாக்குதலைத் தாங்காது'' என்றாள் கமலா.

அவன் சிரித்துக் கொண்டே படுக்கையை வாங்கிக் கொண்டு போய்ப் படியேறித் திண்ணையில் தொப்பென்று போட்டுவிட்டு வேகமாய்த் திரும்பிய சமயம் கமலா கடைசிப் படி ஏறிக் கொண்டிருந்தாள். அவன் மீது இடித்து விடாதிருக்க அவள் இப்பால் நகர அவனும் அதே நோக்கில் அதே திசையில் நகர, இவள் உடனே எதிர்ப் பக்கம் பாய அவனும் அதையே செய்ய... இப்படி மூன்று நாலு தடவைகள் தடுமாறும்படியாகி விட்டது.

"இது என்ன, இவா இரண்டு பேரும் வீட்டு வாசல்லே பால்ரூம் டான்ஸ் ஆட ஆரம்பிச்சுட்டா?" என்றான் விசு, தான் பார்த்த ஓர் ஆங்கிலப் படத்தை நினைவுக்குக் கொணர்ந்தவனாக.

"அசடு! தத்துப் பித்தென்று பேத்தாதே" என்று காமாட்சி அம்மாள் அதட்டினாள்.

கமலா வெட்கமடைந்தவளாகப் படிகளை விட்டு இறங்கி ஓரமாய் ஒதுங்கி நின்றாள்.

"சற்று நேரம் திண்ணையில் உட்கார்ந்திருங்கள். வீட்டுச் சொந்தக்காரரிடம் சாவி வாங்கிக் கொண்டு வருகிறேன்" என்று சொல்லிவிட்டுக் கல்யாணம் மறுபடி காரில் ஏறி அதைக் கிளப்பிக் கொண்டு போனான்.

"ரொம்பப் பழங்காலத்து வீடு" என்றாள் காமாட்சி அம்மாள்.

"வீடு என்று கிடைத்தால் போதாதா? இதுவே சைதாப்பேட்டையில் இருந்தால் ஐம்பது ரூபாய் வாடகை கேட்பார்கள்" என்றார் மாசிலாமணி முதலியார்.

"இப்போது யார் வாடகை கொடுக்கிறார்கள்? எல்லாரும்தான் ஜப்பான்காரனுக்குப் பயந்து விழுந்தடித்துக்கொண்டு ஓடுகிறார்களே" என்றாள் கமலா.

"நாம் மட்டும் பயப்படாமல் என்ன செய்தோமாம்?" என்றான் விசு.

"நாம் எங்கேடா பயந்தோம்? பீதியல்லவா அடைந்தோம். ஒரே கிலி!" என்றாள் கமலா.

விசுவினால் சும்மா உட்கார்ந்திருக்க முடியவில்லை. கதவருகே போய்ப் பூட்டைப் பிடித்து இழுத்தான். பூட்டு திறந்து கொண்டது.

"பார்த்தீர்களா! ஒரு 'மாஜிக்' செய்தேன். பூட்டுத் திறந்து கொண்டது. வாருங்கள்! வாருங்கள்!" என்றான் விசு.

எல்லாரும் உள்ளே போனார்கள். காமாட்சி அம்மாள் விடுவிடு என்று வீட்டைச் சோதித்து விட்டு வந்து, "சமையலறை கொஞ்சம் கூட வசதியாய் இல்லே. அம்மி, கல்லுரல் ஒன்றும் கிடையாது. அடுப்பு இடிந்து கிடக்கிறது. நான்தான் சொன்னேனே ரொம்பப் பழங் காலத்து வீடு" என்றாள்.

கமலா கணப்பொழுதும் வீணாக்காமல் பின்கட்டில் அகப்பட்ட ஒரு துடைப்பத்தைக் கொணர்ந்து முற்றத்தை ஒட்டினாற்போ





விருந்த இடத்தைத் துப்புரவாகப் பெருக்கினாள். மேஜை நாற்காலிகளைத் துடைத்தாள். சாமான்களை அவனும் விகவுமாக உள்ளே எடுத்து வந்து வைத்தார்கள்.

இன்னும் சில நிமிஷங்களில் நன்றாக இருட்டிவிடும் என்று உணர்ந்தவளாக அவசரம் அவசரமாகக் கொல்லைப்புறம் சென்று கிணற்றிலிருந்து ஒரு குடம் நீர் இழுத்து முகம் கழுவினாள். மறுபடியும் உள்ளே வந்து முகத்தைத் துடைத்துப் பவுடர் போட்டுக் கொண்டாள். முற்றத்தில் மட்டுமே இருந்த வெளிச்சத்தில் நெற்றிக்கு இட்டுக் கொண்டாள்.

''ஸ்விட்ச் இருக்கிற இடமே தெரியவில்லையே?'' என்று காமாட்சி அம்மாள் சுவர்களில் தேடினாள்.

''விளக்கு இருந்தால்தானே ஸ்விட்ச் இருக்கும்? வீட்டுக்கு மின் இணைப்பே கிடையாது'' என்றார் மாசிலாமணி.

''அட கடவுளே! போயும் போயும் இப்படிப்பட்ட வீடு தானா கிடைத்தது உங்களுக்கு?''

''வாயை மூடிக் கொண்டு இரு. இன்று ராத்திரி தங்குவதற்கு இடம் கிடைத்ததே அதைப் பார்க்கலே? புகார்களை அடுக்க ஆரம்பித்துவிட்டாள்!'' என்றார் மாசிலாமணி.

''நீங்கள் எதற்கு என்மேல் எரிந்து விழுறேள்? அந்தப் பிள்ளையாண்டான் நல்ல மாதிரியா இருக்கான். அவனிடத்திலே சொன்னால் எல்லாம் சரிப்படுத்தித் தருவான். ஒரு நாள் இரண்டு நாள் இருந்தாலும் எதற்காக அசௌகரியப்பட்டுக் கொண்டு இருக்கணும்?''

''ஆமாம்! இரண்டு நாட்களுக்காக விளக்கு மட்டுமா போட்டுத் தருவா? வெள்ளை அடிச்சு, ரிப்பேர் பார்த்தும் தருவா. கேட்டுப் பாரு'' என்றார் மாசிலாமணி.

''ஏன் இரண்டு நாட்களோடு போவானேன்? ஊருக்கு ஒரு கடிதாக எழுதிப் போட்டால்போச்சு. உங்க அண்ணா, 'தம்பி வரக் காணுமே'ன்னு உருகவா போகிறார்?''

மாசிலாமணியும் ஏறத்தாழ அவளைப் போலவேதான் அப்போது சிந்தித்துக்கொண்டிருந்தார். 'கிராமத்துக்குப் போய் அண்ணாவுக்குப் பாரமாக இருக்க வேண்டாம் என்பதற்காகவே கடவுள் இங்கே நம்மைக் கொண்டு வந்து சேர்த்திருக்கிறாரோ?' என்று நினைக்கத் தொடங்கியிருந்தார். என்றாலும், ''அதையெல்லாம் போகப் போகப் பார்த்துக் கொள்ளலாம். எடுத்த எடுப்பிலேயே அவர்களைப் பயமுறுத்தி விடாதே'' என்று மனைவியை எச்சரித்து வைத்தார். ''இரவு தங்குவதற்கு மட்டும்தான் இடம் கேட்டு இங்கே வந்திருக்கிறோம். அதை மறந்து விடாதே'' என்றார்.

## அத்தியாயம் 6

# கோபம் தணிந்தது

விகவம் கமலாவிடம் தலைவாரிக் கொள்ளச் சீப்புக் கேட்டான். அவள், ''இப்போ கொடுக்க முடியாது'' என்றாள்.

''அப்புறம் அம்மாவிடம் சொல்லிடுவேன்!''

''சீ பேசாமலிருடா.''

''அம்மா! கமலா அதற்குள் அலங்காரம் பண்ணிக் கொள்ள ஆரம்பித்து விட்டாள். எதற்காகத் தெரியுமா?''

''சீ, சும்மா இருடா!'' என்று கமலா கையை ஓங்கிச் சீப்பை அவன் மேல் கோபத்தில் விட்டெறிந்தாள்.

விகவம் அதை லாகவமாகப் பிடித்துக் கொண்டு, ''கொடுத்துட்டியே, எனக்குக் கிடைச்சுடுத்தே'' என்றான். அவள் அவனைத் தாவிப் பிடிக்க வந்தபோது நழுவி வாசல் புறம் ஓடினான்.

அங்கே கல்யாணசுந்தரமும் வீட்டுச் சொந்தக்காரர் ரங்கநாதனும் வந்து கொண்டிருந்தனர். விக ரங்கநாதன் மீது மோட்டிக் கொண்டான்.

அவர், ''இது என்ன அக்கிரமம்? வீடு திறந்திருக்கிறது; என் உத்தரவின்றி யாரோ என் வீட்டை ஆக்கிரமித்தது மட்டுமின்றி இப்படி என்னையே உள்ளே வர விடாமல் மோதி வதைக்கிறார்களே'' என்றார்.

கல்யாணமும் வியப்படைந்தவனாக விகவைப் பிடித்து நிறுத்திக் கொண்டு, ''கதவு எப்படித் திறந்தது?'' என்று கேட்டான்.

''எனக்கு மந்திரம் தெரியும் மாமா! 'ஓபன் ஸீஸேம்' என்றேன்! கதவு திறந்துகொண்டது.''

''பார்த்தீர்களா பையனின் கெட்டிக்காரத்தனத்தை'' என்று கல்யாணம் மெச்சிக்கொண்டான்.

''மாளிகையாவது, மேதாவிலாசமாவது. சுத்தப் போக்கிரித்தனமா இருக்கிறதே. சொந்தக்காரன் அனுமதியின்றிப்



''என்டி! போன மாசம் முழுக்க நான் சமையல் செய்தேன். 'காஸ்' இருபத்தைந்து நாள் வந்தது. இந்த மாதம் நீ பதினெட்டே நாளில் 'காஸை'த் தீர்த்து விட்டாயே!'' என்பாள் மாமியார்.

''அதற்கு நான் என்ன பண்ணுவேன்? காஸ் கம்பெனிக்காரர் போன மாசம் கூடுதலாகக் காஸ் அடைக்க அனுப்பியிருப்பா. இந்த மாசம் குறைக்கட்டாளோ என்னமோ'' என்பாள் மாட்டுப் பெண்.

இந்தகைய வாதங்கள் தவறு என்று நிரூபிக்கச் சென்னையிலுள்ள முப்பது இல்லத்தரசிகளை ஐ. ஓ. ஸி. நிறுவனம் இண்டேன் தயாராகும் மெட்ராஸ் ரிஃபைனரிக்கு அழைத்துச் சென்றது.

அப்பெண்மணிகள் 'இந்தியன் ஆயில்' அதிகாரிகளைப் பல கேள்விகள் கேட்டுத் திணற அடித்தனர்.

''சிலிண்டரில் காஸ் 'லீக்'காகி விடுமோ?''

''ஸிலிண்டரில் எத்தனை 'காஸ்' மீதம் இருக்கு என்று ஒரு 'இண்டிகேட்டர்' இல்லையே?''

எண்ணெய் சுத்திகரிப்பு ஆலையில் காலியான ஸிலிண்டரில் நவீன இயந்திர சாதனங்களினால் 'காஸ்' அடைக்கப்படுவதை அவர்கள் நேரில் பார்த்தனர். வாயு அளவு சரியாக இருக்கிறதா என்பது பரிசீலிக்கப்படுவதைப் பார்த்ததும் மனக்குறை தீர்ந்தது.






இந்தியன் ஆயில் அதிகாரிகள் சில நல்ல யோசனைகளை அவர்களுக்குச் சொன்னார்கள்.

○ பெட்ரோலியம் வாயு திரவவடிவில் ஸிலிண்டரில் அடைக்கப்படுகிறது. அழுத்தம் குறைந்ததும் வாயு வாகிறது. உபயோகத்திலில்லாத போது ஸிலிண்டர் வால்வையும் பர்னர் குமிழிகளையும் இறுக மூடி வைத்துக் கொள்ள வேண்டும்.

○ தான்தோன்றி மேதைகளை ஸிலிண்டரில் கை வைக்க விடாதீர்கள். கம்பெனி அலுவலர்களை நம்புவதே நல்லது.

○ ஸிலிண்டரோடு பர்னரை இணைத்திடும் குழாயை அலட்சியம் செய்யக் கூடாது. பழுது ஏதேனும் தென்பட்டால் மாற்றி விட வேண்டும்.

○ ஸிலிண்டர் மாற்றும்போது சிகரெட் பற்ற வைப்பது விளக்கேற்றுவது போன்ற காரியங்களைத் தவிர்க்கவும்.

○ ஸிலிண்டரைப் படுக்க வைக்கக் கூடாது.

○ சமைக்கும்போது இல்லத்தரசிகள் நைலான் புடவைகளை அணிவதைத் தவிர்ப்பது நலம்.

— குண்டுமணி

- மேலட்டை வண்ணப்படம்: உதயகுமார்

---

பூட்டை உடைத்துக் கொண்டு உள்ளே போவதா? இதைச் சும்மா விடக் கூடாது! கேஸ் போடப் போகிறேன்.''

''கண்டிப்பாகச் செய்யுங்கள். ஆனல் ஒன்று. வக்காலத்து என்னிடமே வர வேண்டும். உங்களுக்குத்தான் தெரியுமே, இந்த ஊருக்குப் பவானி வந்ததிலிருந்து மற்ற வக்கீல்களுக்குக் கேஸ் கிடைப்பதென்பதே குதிரைக் கொம்பாகி விட்டது.''

''ஸார்! ஸார்! அதோ பாருங்கள். வாசற்படிக்கு மேல் என்ன எழுதியிருக்கிறது?'' என்று விசுவநாதன் கை காண்பித்தான்.

அவன் சுட்டிக் காட்டிய இடத்தில் ''வெல்கம்'' என்று எழுதியிருந்தது. ''இப்படி 'நல்வரவு' என்று எழுதிவிட்டுத் தாத்தா கோபித்துக்கொள்ளலாமா?''

''ஏண்டா பயலே! என்னைப் பார்த்தால் உனக்குத் தாத்தாவாகத் தோன்றுகிறதா?''

''இல்லே, இல்லவே இல்லே. கொள்ளுத் தாத்தாவாகத்தான் தோன்றுகிறது.''

''பையன் சுத்த வாலாக இருக்கிறன். குடும்பத்தில் மற்றவர்களும் இப்படித்தான் இருப்பார்கள். இவர்களை ஒருநாளும் குடி வைக்க முடியாது. இப்போதே கிளப்பிவிட்டு மறு காரியம் பார்க்கவேண்டும்'' என்று கூறிய வாறே உள்ளே நுழைந்தார் ரங்கநாதன்.

அவர் கால் நிலைப்படியில் தடுக்க, விழப் போனர். கல்யாணம் சட்டென்று அவரைத் தாங்கிக் கொண்டான்.

''பார்த்தீரா? இதற்குத்தான் வீட்டுக்கு எலெக்ட்ரிக் லைட் போடும் என்றேன். கேட்டீரா?'' என்றான் கல்யாணம். ''கொஞ்சம் இருங்கள். ஓர் அரிக்கேன் லாந்தர் இரவல் வாங்கிக்கொண்டு வருகிறேன்.''

''வேண்டாம். இங்கேயே ஒரு லாந்தர் காமிரா அறையில் இருந்தது'' என்று காமாட்சி அம்மாள் குரல் கேட்டது. ''டேய் விசு! வந்து விளக்கை வாங்கிண்டு போடா.''

''வேண்டாம், வேண்டாம். நான் வந்த வழியே திரும்பப் போகிறவன்தான். கல்யாணம், நீ இருந்து இவர்களைக் கிளப்பி விட்டு வந்து சேர்.''

''அப்படிச் சொல்லாதீர்கள் சுவாமி. இந்தப் பையன் கொஞ்சம் துடுக்கு. இவன் தாயார் தகப்பனர் ரொம்ப நல்லவர்கள். இவனுக்கு அக்கா ஒருத்தி இருக்கிறள். கல்யாணம் ஆக வேண்டிய பெண். அவளைப்

# உங்கள் குழந்தையை இந்தக் கோடையில் வேர்க்குரு எங்கு தாக்கும்?




வேர்க்குரு எங்கு தாக்கினாலும், அதை முறியடிக்க உபயோகியுங்கள் ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர். ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடரில் மட்டுமே நிரூபணம் பெற்ற மருந்துக் கலவை அடங்கியுள்ளது. அது மூன்று வழிகளில் செயலாற்றுகிறது.

- வியர்வையை உறிஞ்சுகிறது; சருமத் துவாரங்கள் அடைபடுவதைத் தடுக்கிறது.
- பாக்டீரியா கிருமிகள் பெருகுவதைத் தடுக்கிறது.
- சுகமும் குளுமையும் தந்து, உடனடி நிவாரணம் அளிக்கிறது. ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடரைக் குளித்தவுடனும், படுக்கும் முன்பும் உடம்பின்மீது தாராளமாகத் தூவுங்கள். உடனடியாக வேர்க்குருவைத் தடுக்கத் தாய்மார்கள் நம்பும் மருந்து கலந்த வேர்க்குரு பவுடர் இது ஒன்றுதான்!




சந்தன மணத்திலும் கிடைக்கிறது.

## ஜான்ஸன்ஸ்* ப்ரிக்லி ஹீட் பவுடர் மட்டுமே உடல் எரிச்சலை நிறுத்துகிறது, அரிப்பிலிருந்து நிவாரணமளிக்கிறது உடனடியாக.

Johnson & Johnson



OBM-4316/R TAM

# காப்பி அடிக்க முடியாதது!



ஜீவனுள்ள ஒரே காபி

# நரசுஸ்

## "தெர்மலோ" காபி

''தெர்மலோ'' முறை தயாரிப்பு
நரசுஸ் காபியின் தனிச் சிறப்பு.

நற்சுவை மிகுந்தது.
நறுமணம் கொண்டது.
நாளும் புதியது.
நரசுஸ் காபி!

தயாரித்த 24 மணி
நேரத்திற்குள்
தமிழகத்தில் உள்ள எங்கள்
எல்லா கிளைகளின் மூலம்
வினியோகம்
செய்யப்படுகிறது.



நரசுஸ் காபி கம்பெனி.
சேலம்-636 007
கிளைகள்:- பாண்டிச்சேரி &
தமிழகமெங்கும்.



ADWAVE/NCC 410 TAM

பார்த்தால் உங்களுக்கே மனம் இளகிப் போகும்.''

''எனக்கே மனம் இளகிப்போகும் என்றால் என்ன அர்த்தம்? நான் அவ்வளவு கல் நெஞ்சக்காரன் என்கிறாயா?''

''இல்லே இல்லே. எதைச் சொன்னாலும் தப்பாக எடுத்துக் கொள்கிறீர்களே.''

''தப்பும் எடுக்கலே, தாரையும் எடுக்கலே. இன்னும் அதற்குக் காலம் வரவில்லே.''

இரண்டு பேரும் உள்ளே போனார்கள். ''தாத்தா நல்ல சுபமான வார்த்தையாச் சொல்லிண்டு உள்ளே நுழையறார்'' என்றான் விசு.

மாசிலாமணி முற்றத்தின் பக்கத்திலிருந்த பழைய சாய்வு நாற்காலியில் விச்ராந்தியாக விசிறிக் கொண்டு அமர்ந்திருந்தார். ''வாருங்கள், வாருங்கள்'' என்றார்.

''இது வேறேயா? என் வீட்டுக்குள்ளே நான் வருவதற்கு 'வாருங்கள் வாருங்கள்' என்று எனக்கே உபசாரமா?''

''வந்தவர்களை வாருங்கள் என்று அழைப்பது நம் நாட்டுப் பண்பாடு. அதனால்...''

''சொந்தக்காரர் அனுமதி இல்லாமல் பூட்டை உடைச்சு வீட்டுக்குள் நுழையறதும் நம் நாட்டுப் பண்பாடோ?''

கல்யாணம் இப்போது குறுக்கிட்டு, ''இந்த வீட்டின் சொந்தக்காரர் ரங்கநாத முதலியார் என்று சொன்னேனே இவர்தான்.. ரொம்ப நல்ல மனிதர் பரோபகாரி...'' என்றான்.

''நிறுத்தப்பா உன் வர்ணனையை. நான் நல்லவனுமில்லே, பரோபகாரியு மில்லே! நல்லவர்களுக்கு நல்லவன்; பொல்லாதவர்களுக்குப் பொல்லாதவன்!''

''மன்னிக்கணும். சத்தியமா நாங்க பூட்டை உடைக்கலே. இந்தப் பயல் போய்ப் பூட்டைத் தொட்டான்...''

''நான் தொடக்கூட இல்லே. கிட்டப் போனேன். அது தானாகத் திறந்துகொண்டது'' என்றான் விசு.

காமாட்சி அம்மாள் தூண் மறைவிலிருந்தபடியே பேசினாள்: ''அஸ்தமிக்கிற வேளையிலே நாங்க இந்த ஊரிலே வந்து அகப்பட்டுக் கொண்டோம். கல்யாணம் ஆக வேண்டிய வயசிலே இந்தப் பெண் வேறே இருக்கிறாள். இவளையும் அழைத்துக்கொண்டு இனிமேல் இந்த இருட்டிலே நாங்கள் எங்கே போகிறது? அடி பெண்ணே, கமலா! மாமாவுக்கு நமஸ்காரம் பண்ணடி!''

''வேண்டாம்; வேண்டாம்! நமஸ்காரமும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம்!'' என்று சொல்லிவிட்டு ரங்கநாதன் கமலாவை பார்த்தார்.

பிறகு, கல்யாணத்தை நோக்கி, ''என்னமோ வந்து விட்டார்கள். இரவு நேரத்தில் இவர்களை வீட்டை விட்டுப் போகச் சொல்ல மனமில்லே'' என்றார்.

''இப்படி நீங்கள் சொல்வீர்கள் என்று எனக்கு நிச்சயமாய்த் தெரியும். இல்லாவிட்டால் இவர்களை இவ்வளவு நம்பிக்கையுடன் இங்கே அழைத்து வந்திருப்பேனா? உங்களுடைய பரோபகார குணம்...''

''சரி! சரி! இப்படியே முகஸ்துதி பண்ணி வாடகைக்கு நாமத்தைப் போட்டு விடப் பார்க்காதே. ஒரு நாள் தங்கினாலும் ஒரு மாத வாடகை!''

''ஒரு மாத வாடகை என்ன? மூன்று மாத வாடகையே வாங்கிக் கொள்ளுங்கள். இவர்களும் அவ்வளவு அவசரமாகக் கிளம்பப் போவதாகத் தெரியவில்லே.''

''மாதம் எழுபத்தைந்து ரூபாய். காலணா குறைக்க முடியாது. சுவரிலே ஆணி கீணி அடிக்கக் கூடாது. சிம்னி விளக்கை எரிய விட்டுப் புகை அடையச் செய்யக் கூடாது. அடிக்கடி ஒட்டடை அடித்துச் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும்.''

'' அதற்கெல்லாம் நான் பொறுப்பு; வாருங்கள் போகலாம்'' என்று கல்யாணம் ரங்கநாதனை அழைத்துக் கொண்டு வெளியேறினான்.

கமலா விசுவிடம், ''அந்த மாமாவுக்கு ஒரு தாங்க்ஸ் சொல்லுடா'' என்றாள்.

விசு வாய் திறப்பதற்குள்ளாகக் கல்யாணம் கமலாவைத் திரும்பிப் பார்த்து, ''இப்படிப் போகிற போக்கில் தாங்க்ஸ் சொன்னால் ஏற்றுக் கொள்ள மாட்டேன். பெரியவரை அவர் வீட்டில் இறக்கி விட்டுத் திரும்பி வந்து சாவகாசமாகக் கேட்டு வாங்கிக்கொள்கிறேன்'' என்றான்.

கமலாவின் நெஞ்சு கிளுகிளுத்தது.

(தொடரும்)

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு
## பிரைவேட் லிமிடெட்

"வீணு விகார்" — 17-A, ஃபிளாங் ரோடு,
ஷண்முகானந்தா ஹாலுக்கு அருகில்
சயான் (கிழக்கு) பம்பாய்- 400 023
டெலிபோன்: 471455
தந்தி: "GROWRICH" தபால் பெட்டி 6759

ஏலம் கேட்டபிறகு டிவிடெண்டு அடையும் வசதியுள்ள மேற்கண்ட

மே, 1976 புதிய குரூப்புகள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | மாதங்கள் | ஏலத் தேதி |
|---|---|---|---|---|
| STB | ரூ. 100/- | ரூ. 2500/- | 25 மாதங்கள் | 9-5-76 |
| STC | ரூ. 50/- | ரூ. 1250/- | 25 மாதங்கள் | 9-5-76 |
| STF | ரூ. 25/- | ரூ. 625/- | 25 மாதங்கள் | 9-5-76 |
| LTM | ரூ. 50/- | ரூ. 2000/- | 40 மாதங்கள் | 9-5-76 |
| LTG | ரூ. 125/- | ரூ. 5000/- | 40 மாதங்கள் | 16-5-76 |
| LTF | ரூ. 250/- | ரூ. 10000/- | 40 மாதங்கள் | 30-5-76 |
| LTE | ரூ. 500/- | ரூ. 20000/- | 40 மாதங்கள் | 30-5-76 |

தலைமை ஆபீஸ் & ரிஜிஸ்டர்டு ஆபீஸ்:
"பாலுஸேரி பில்டிங்ஸ்"
3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 600 005

கிளைகள்: பெங்களூர் - கல்கத்தா - புது டில்லி & கோயமுத்தூர்

இலவசப் பிரசுரத்திற்கு எழுதுங்கள்
சீட்டுகள் ஒதுக்குதல் கம்பெனியின் உரிமையைப் பொறுத்தது

வேலை செய்யும் நேரங்கள்:
காலை 8 மணி முதல் 10-30 வரை; மாலை 4 மணி முதல் 7-30 வரை

வார விடுமுறை: திங்கட்கிழமை

ஸ்தாபிதம்: 1947

30 YEARS

எங்கள் சேவை உங்களுக்குத்தேவை

# குறளோவியம் கண்டோம்!



● 'நாட்டின் பொருளாதார நிலை பலவீன முற்றுள்ளபோது மக்களின் வரிப் பணத்தை உற்பத்திக்கு உதவாத ஒரு திட்டத்தில் ஏராளமாகச் செலவிட வேண்டுமா?' என்ற அளவில் சர்ச்சைக்கு உள்ளானபோதிலும் வள்ளுவர் கோட்டம் சிறந்ததொரு கலைப் படைப்பு என்பதில் யாருக்கும் ஐயமில்லை. ●

"ஸூச்சிதமாக இரண்டே வரிகளில் உலகப் புகழ்பெற்ற குறட்பாக்களை எழுதியவருக்கு இவ்வளவு பெரிய உருவமா?" என்று பிரமித்து நின்றேன்.

என் எண்ண ஓட்டத்தைப் புரிந்துகொண்டவர்போல் பக்கத்தில் வந்தார் திரு வி. கணபதி ஸ்தபதி. மகாபலிபுரத்தில் இயங்கும் கட்டிடக் கலை மற்றும் சிற்ப சாஸ்திரப் பள்ளியின் முதல்வர் அவர்.

"இருபது டன் நிறையுள்ள ஒரே கல்லை, திருவண்ணாமலைப் பகுதியிலிருந்து கொண்டு வந்து, அதைத் தேய்த்துத் தேய்த்துப் பக்குவப்படுத்தி அதன் மேல் உருவத்தை வரைந்து பிறகு அந்த வரைகோட்டில் உளி கொண்டு செதுக்கிறோம். சில ஏழு அல்லது எட்டு டன் நிறையில் வந்து நிற்கிறது!"

"திருவாரூர்த் தேர் போன்ற அமைப்பில் வள்ளுவர் கோட்டம் உருவாக்க வேண்டும் என்று யோசனை கூறியவர் திரு கருணாநிதி தானே?"

"ஆமாம். நான் ஒரு மாதிரிப் படம் போட்டு அவரிடம் காண்பித்தேன். அவரே, விமானப் பகுதியில் சில மாறுதல்களைப் போட்டு யோசனை சொன்னார். அத்துடன் நிற்காமல், என் உதவியாளர்களைத் திருவாரூருக்கு அனுப்பி அந்தத் தேர் அமைப்பை நன்றாகக் கவனித்து வரச் சொன்னார்."

நுங்கம்பாக்கம் ஏரி வட்டத்தில் கடந்த பல மாதங்களாகக் 'கல்கல்' என்ற உளிச் சத்தம் இரவு பகலாகக் கேட்டுக் கொண்டே இருந்தது. கல்கி வர்ணித்த, ஆயனச் சிற்பி வாழ்ந்த சரித்திரக் காலத்திலேயே நாமும் வசிக்கிறோமோ என்ற பிரமை சுற்று வட்டார

படங்கள்: வள்ளுவர் கோட்டத்தின் ஒரு தோற்றமும் அதிலுள்ள வள்ளுவர் சிலையும் திறப்பு விழாக் காட்சியும்

அண்மையில் நேபாளப் பிரதமர் துளசிகிரி அவர்கள் சங்கராச்சாரிய ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளை காஞ்சிபுரம் ஸ்ரீ மடத்தில் தரிசனம் செய்து கொண்டார். நேபாள சர்க்காரின் சார்பில் ராமேசுவரத்தில் ஒரு வேத பாடசாலை நடைபெற்று வருகிறது. ஸ்ரீ மடத்தின் சார்பில் நேபாளத்திலும் ஒரு வேத பாடசாலை நடைபெற்று வருகிறது. சமயத் துறையிலும் ஆன்மீகத் துறையிலும், எப்பொழுதும் இரு நாடுகளும் ஒன்றே என்று ஸ்ரீ ஆசார்ய சுவாமிகளிடம் நேபாளப் பிரதமர் சொன்னார். ஸ்ரீ ஆசார்ய சுவாமிகளைத் தரிசனம் செய்வதற்கு முன்பு ஸ்ரீ காமாக்ஷி அம்பாளைத் தரிசனம் செய்துவிட்டு வந்தார் நேபாளப் பிரதமர்.





ஏப்ரல் 5ந் தேதி நடந்த ஸ்ரீ காஞ்சி காமாக்ஷி அம்மன் கோவில் கும்பாபிஷேகத்தைப் பிரதான ரித்விக்குகளாக இருந்து நடத்தி வைத்த ஸ்தானீகர்கள் ஸ்ரீ காமகோடி சாஸ்திரி, ஸ்ரீ ராஜமார்த்தாண்ட சாஸ்திரி, ஸ்ரீ நீலக்கல் ராமச்சந்திர சாஸ்திரி ஆகியோர்களுக்கும் கோவில் திருப்பணிகளில் பிரதானமாக இருந்து திருப்பணியைப் பூர்த்தி செய்த ஸ்ரீ கணபதி ஸ்தபதியாருக்கும் ஸ்ரீ காஞ்சி காமகோடிப் பீடாதிபதி ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் சால்வைகள் போர்த்திக் கௌரவித்தார்.

மக்களுக்கு இருந்து வந்தது. ஜல்ஜல் என்ற சதங்கை ஒலி மட்டும் கேட்டிருந்ததோ பலருக்குச் சித்தப்பிரமையே கூட ஏற்பட்டிருக்கும்!

கணபதி ஸ்தபதி மேலும் கூறினார்:

''இது சிற்பிகளுக்கும் சோதனை அளித்த விஷயம்! அதாவது திருக்குறளின் நூற்று முப்பத்தி மூன்று அதிகாரங்களுக்கும் உருவகமாக நூற்று முப்பத்தி மூன்று சிற்பங்கள் தேவைப்பட்டன. இதற்குக் கலைத்திறனுடன் கற்பனைத் திறனும் தேவை. எனக்கு உதவியாக, நடராஜன் என்னும் இளைஞர், நல்ல விதத்தில் பல கற்பனைகளை உருவாக்கினார். கருணாநிதி அவர்களே, ஏறத்தாழப் பதினைந்து சிற்பங்களுக்கு, 'ஐடியா'க் கொடுத்திருக்கிறார்.''

பிப்ருவரி மாத ஆரம்பத்தில் நடப்பதாக இருந்த வள்ளுவர் கோட்டத் திறப்புவிழா கடைசியில் ஏப்ரல் மாத மத்தியில் நடந்தேறியிருக்கிறது. இதற்குக் குடியரசுத் தலைவரே வருகை தந்தார்.

குட்டையாக நீர் தேங்கிக் கிடந்த இடம் குப்பை மேடாக மாறி இப்போது குறள் வழங்கியவர் குடியேறிய கோவிலாக மாறிச் சென்னை நகரின் அழகை அதிகப்படுத்தியுள்ளது. நாற்பத்தியெட்டு லட்ச ரூபாய் நிர்மாணத்தில் ஆரம்பித்த வள்ளுவர் கோட்ட வேலை இப்போது எழுபது லட்சத்தைத் தாண்டிவிட்டது. மேற்கொண்டு இன்னும் ஏழு லட்சம் ரூபாய் செலவாகும். கூலி விகித உயர்வு ஒரு காரணம் என்று சொல்கிறார்கள்.

நாலாயிரம் பேர் ஒரே நேரத்தில் அமரக் கூடிய அரங்கம் ஒன்றையும், கல் தேருக்கு முன் அமைத்திருக்கிறார்கள். தென் ஆசியப் பகுதியிலேயே பெரிய மண்டபம். நடுவிலே தூண்களே இல்லாத அமைப்பு.

''இன்னும் கோட்டத்தின் வேலைகள் முடியவில்லை போலிருக்கிறதே?'' என்று கணபதி ஸ்தபதியை வினவினேன்.

''ஆம்! முப்பாலைக் குறிக்கும் மூன்று யானைகளைத் தேரின்முன் நிறுத்த வேண்டும். தேர்ச் சக்கரங்களை அழகு படுத்த வேண்டும். பதிக்கப்பட்ட நூற்றிமுப்பத்தி மூன்று உருவகச் சிற்பங்களுக்கு மெருகு ஏற்ற வேண்டும்'' என்றார். தொடர்ந்து பெருமூச்சுடன் ''வள்ளுவர் கோட்டம் முடிந்து விட்டது. என் பள்ளியின் பழைய மாணவர்களுக்கும், தமிழ் நாட்டிலுள்ள இரண்டாயிரத்துக்கும் மேற்பட்ட கல் வேலைக்காரர்களுக்கும் அடுத்த வேலைவாய்ப்பு எங்கே என்று சிந்திக்கிறேன்'' என்றார்.

— பேட்டி: **மேனு**

# முதல் பெண்மணி

நாகூர் தர்க்காவின் நானூறு வருஷ சரித்திரத்தில் முதல் தடவையாக ஒரு பெண்மணி அந்தத் தர்காவின் உட்பிராகாரத்தினுள் நுழைந்தார். அவர் பாரதத்தின் முதல் பெண்மணியும்கூட; ராஷ்டிரபதி மனைவி அபீதா பீகம்.

பட்டதாரி பீகம் அபீதாவின் சேவா மனப்பான்மை அஸ்ஸாம் வெள்ளம், சீனப் படையெடுப்பு, பங்களா தேசப் போர் ஆகிய சந்தர்ப்பங்களில் பெருக்கெடுத்தது. பாதிக்கப்பட்ட குடும்பங்களுக்குப் பெருதவி புரிந்தார். மனிதாபிமானப் பணிகளில் ஆர்வம் இருப்பதால் தமது தமிழக விஜயத்தின் போது மாதர்கள் வாலண்டரி சர்வீஸ் நான்காவது ஆண்டு விழாவில் மகிழ்ச்சியுடன் கலந்து கொண்டார்.

இதன் இயக்குனர் ஸ்ரீமதி மதுபென்ஷா, ''எங்கள் சேவை ஸ்தாபனத்தின் இளம் பிரிவினர் எட்டு கல்லூரிகளின் ஐந்நூறு மாணவிகள். இவர்கள் 'வரதட்சிணை புறக்கணிப்போம்' என்று பிரதிக்ஞை எடுத்திருப்பதை ராஷ்டிரபதி மனைவியாருக்கு நான் எடுத்துரைத்தேன்'' என்கிறார்.

''உங்களுக்குத் தெரியுமா? ஸ்ரீமதி அபீதா பீகம் ஒரு தலைசிறந்த ஓவியர். புது தில்லியில் அவர் ரூங்கில் சிற்பக் கண்காட்சி சமீபத்தில் நடத்தினார். ராஷ்டிரபதி பக்ருதீன் அலி அஹமத் அந்தக் கண்காட்சியை ஒரு சித்திரம் வரைந்து திறந்து வைத்தார். பீகம் நல்ல பூப்பந்தாட்டக்காரர். பூக்களை அழகுபடுத்தும் கலை, வீட்டை அலங்கரிக்கும் முறைகளில் ஈடுபாடு மிக்கவர். அஹமத் குடும்பத்தில் அல்சேஷனும், வேட்டை நாய்களும் செல்லப் பிராணிகள்!'' என்கிறார் ஸ்ரீமதி பத்மினி ராகவன்.



போய் வருகிறோம் விடை கொடுங்கள்!

● கோவளக் கடற் கரை. உலகச் சுற்றுப் பயணிகளைக் கவர்ந்திழுக்கும் 'Fisherman's Cove' என்ற நவீன ஹோட்டலுக்குள் ஸ்ரீமதி ஸாரா செயத் யூசுப் பாரத ராஷ்டிரபதியையும், பீகம் அபீதாவையும் அழைத்துச் செல்கிறார். பீகம் குத்துவிளக்கேற்றுகிறார்.

''இந்த விடுமுறை இல்லத்தில் நாற்பத்திரண்டு அறைகளும், முப்பத்தெட்டு 'குடிசை'களும் கடலையே நோக்கி அமைந்திருக்கின்றன!'' என்கிறார் ஸ்ரீமதி ஸாரா.

''திருவான்மியூரிலிருந்து மாமல்லபுரம் வரையில் உள்ள இந்தக் கடற்கரையின் அழகையும், சிற்பங்களையும் அனுபவிக்க நாலு நாட்கள் போதுமா? நாற்பது நாளாவது தங்கியிருக்க எனக்கு ஆசை!'' என்கிறார் அபீதா பீகம். கலை உணர்வு பேசுகிறது.

● தமிழக சுற்றுலா அபிவிருத்தி கார்ப்பொரேஷன், மாமல்லபுரத்தில் புதிதாக அமைத்துள்ள விடுதிகளில் ஒன்றில் ஊஞ்சலில் ராஷ்டிரபதி அமர்ந்து ஆடுகிறார். பீகத்தைத் தம் அருகில் வந்து அமர்ந்து கொள்ள அழைக்கிறார். பெண்களுக்கே இயற்கையாக உள்ள நாணம் அபீதா பீகத்துக்கு ஏற்பட்டு, ஆசைக்கு அணை போட்டு விடுகிறது.

● பாரத ராஷ்டிரபதிக்கு மாம்பழம் என்றால் கொள்ளை ஆசையாம். இதை எப்படியோ தெரிந்து கொண்டு ஒரு மாம்பழத் தட்டைப் பாரத ராஷ்டிரபதியிடம் வழங்கினார் ஸ்ரீமதி சௌந்தரா கைலாசம். அவர் அப்படியே அதை பீகம் அபீதாவிடம் ஈந்து விட்டார்! மாம்பழத்தை அவர் அளவாக உண்ண வேண்டும் என்பதில் அபீதாவுக்குத் தானே அக்கறை!



பாரதத்தின் முதல் பெண்மணியும்
தமிழகத்தின் முதல் பெண்மணியும்





கொஞ்சம் கற்பனை செய்து பாருங்கள்! ஒவ்வொரு முறையும் நீங்கள் சுவேகா மோபெடில், வேலைக்கோ, கல்லூரிக்கோ, அல்லது வேறு எங்காயினும் சவாரி செய்கையில் செலவழிப்பது, நீங்கள் பஸ் சவாரி செய்திருந்தால் அதற்கு கொடுப்பதைக் காட்டிலும் குறைவே!

இந்த "சுவேகா மோபெட்" ஒரே ஒரு லிட்டரில் 60 கிலோ மீட்டர்கள் உங்களைக் கொண்டு செல்கிறது. அதையும் விட, நீங்கள் உங்கள் நேரத்தை முடிவற்ற வரிசையில் விரயம் செய்யவேண்டாம்; அல்லது நிரம்பி வழியும் ஜனக்கூட்டத்தில், பஸ்ஸில் மூச்சுத்திணறவேண்டாம்; அல்லது வாடகைக் காருக்காகச் செலவிடும் போது கஷ்டப்பட வேண்டாம்! ஆமாம்! உங்களது சுகமான சவாரிக் கெனவே சிறப்பான முறையில் உருவாக் கப்பட்டுள்ளது. அதனுடைய மிக உறுதி வாய்ந்த வடிவமைப்பு செயின்-இயக்கம், சுவேகா மோபெடின் வேகத்திற்கும், சாலையில் நல்ல பிடிப்பிற்கும் ஏற்றதாக அமைந்துள்ளது.

இதைவிட வேறென்ன வேண்டும்? மோபெட் வகைகளிலேயே சுவேகா ஒன்றுதான் வலுவான குரோமியம் செய்யப்பட்ட அலுமினியச்சிலிண்டர் களைக் கொண்டுள்ளது. அவைகள் தொடர்ந்து சீராக இயங்கிக் கொண்டிருப் பதில் ஆச்சரியமில்லை.

ஆம்! வாழ்க்கையில் சில தரம் மிகுந்த பொருட்கள் மலிவாகவுமிருக்கின்றன!

இரண்டு அழகிய மாடல்கள், கண்ணைக் கவரும் வண்ணத்தொகுப்பு.

மோபெட்ஸ் இந்தியா லிமிடெட்,
திருப்பதி, ஆந்திரப் பிரதேசம்.

# டாக்ஸியில் செல்வது போல் அதன் பயணம். செலவிடும் பணமோ பஸ்ஸில் செல்வதைவிடக் குறைவு!



SAA/MIP/1654

# Suvega

சுவேகா — இந்தியாவில் மிக அதிகமாகத் தேவைப்படும் மோபெட்

டீலர்கள்: M/s. குமார் ஏஜன்ஸிஸ், 30 ஜெனரல் பீட்டர்ஸ் ரோடு, சென்னை-600 002 A. M. S. & பிரதர்ஸ், 216, சர்ச் தெரு, தபால் பெட்டி நெ. 18, காரைக்கால் M/s. ராஜ் மோட்டார்ஸ், 16/1, ஆரணி ரோடு, வேலூர்-632 001 □ M/s. S. V. டிரேடர்ஸ், 502, காந்தி ரோடு, காஞ்சிபுரம் □ M/s. J. & D. Co., 2851/1 p. திருச்சி ரோடு, தஞ்சாவூர்-1 □ M/s. சாந்தி இண்டஸ்ட்ரீஸ், 89, லாரன்ஸ் ரோடு, கடலூர்-1



கிருமிகள் பரவுகின்றன. ஒரு குழந்தைக்கு இந்நோய் கண்டிருந்தால் அதனுடன்நெருங்கிப் பேசிப்பழகும் குழந்தைக்குப் பரவ வாய்ப்பு உண்டு. சில குழந்தைகளுக்கு இந்நோயினைத் தாங்கிக் கொள்



குட்மார்னிங் டாக்டர்

# விழுங்க முடியாத போது..

"குழந்தையை எடுத்துக் கொண்டு பெற்றோர் என் அறைக்குள் நுழைகின்றனர்.

"மூணு நாளா காய்ச்சல் அடிக்கிறது டாக்டர். ஒரு ஸ்பூன் பால் வாய்க்குள் போனவுடனேயே அதை விழுங்க முடியாமல் கடைவாய் வழியே வழிய விடுகிறான். வாயிலிருந்து உமிழ்நீரும் ஒழுகிக் கொண்டேயிருக்கிறது."

"எப்படி இருமுகிறான்?" என்று கேட்டவாறே குழந்தையின் வாய்க்குள் டார்ச் விளக்கு அடித்துப் பார்க்கிறேன். வெள்ளையாக ஜவ்வு படர்ந்துள்ளதைக் காண்கிறேன்.

"இவன் இருமுகிறதே ஒரு மாதிரியா இருக்கு, டாக்டர். 'கல்,கல்' என்று நாய் குரைக்கிற மாதிரி இருமுகிறான். குழந்தையின் குரலே மாறிப் போச்சு."

முனையில் பஞ்சு சுற்றிய குச்சியினால் குழந்தையின் வாய் மேலண்ணத்திலிருந்து சிறிதளவு ஜவ்வைத் துடைத்து எடுத்து வைத்துக் கொண்டு, குழந்தைக்கு ஓர் ஊசி போட்டுவிட்டு, "குழந்தையை உடனே ஆஸ்பத்திரியில் 'அட்மிட்' செய்து விட வேண்டும். தாமதிக்கவே கூடாது" என்கிறேன். ஆஸ்பத்திரியில் சேர்க்க வேண்டும் என்றதும் பெற்றோரின் கவலை அதிகமாகியது.

**"குழந்தைக்கு என்ன நோய் டாக்டர்?"**

"டிஃப்தீரியா – தொண்டை அடைப்பான். கிளம்புங்கள்" என்ற பெற்றோருக்கு ஆறுதலும் தைரியமும் கூறி அனுப்பி வைக்கிறேன்.

காய்ச்சல் 100 டிகிரியைத் தாண்டவில்லை என்பதால் அசிரத்தையாக இருந்து விட்டனர் பெற்றோர். அது நெருக்கடியான கட்டத்துக்குக் குழந்தையைக் கொண்டு போய் விட்டது. இந்நோய் குறித்து டாக்டர் மேலும் விளக்குகிறார்:

"ஆறு மாதங்களுக்குட்பட்ட குழந்தைகளுக்குப் பொதுவாக இந்நோய் வருவதில்லை. இரண்டு முதல் ஐந்து வயது வரையிலான குழந்தைகளே இந்நோய்க்கு அதிகம் இலக்காகின்றனர். பெரியவர்களுக்கும் கூட இந்நோய் வரக்கூடும். காற்றின்மூலம் டிஃப்தீரியா கிருமிகள் பரவுகின்றன. ஒரு குழந்தைக்கு இந்நோய் கண்டிருந்தால் அதனுடன்நெருங்கிப் பேசிப்பழகும் குழந்தைக்குப் பரவ வாய்ப்பு உண்டு. சில குழந்தைகளுக்கு இந்நோயினைத் தாங்கிக் கொள்ளும் எதிர்ப்புச் சக்தி இயல்பாகவே இருத்தல் கூடும். அத்தகைய குழந்தைகள் தாங்கள் அந் நோயினால் பாதிக்கப்படாவிடினும் மற்ற குழந்தைகளுக்கு இந்நோய் பரவக் காரணமாக அமையக்கூடும்.

"இது பெரும்பாலும் குழந்தைகளையே பீடிக்கும் கொடிய நோய். ஆதலின் சிகிச்சை தொடங்குவதில் தாமதமே கூடாது. சிறிதளவு சந்தேகம் இருந்தாலும் டிஃப்தீரியாவுக்குரிய சிகிச்சை ஆரம்பித்துவிட வேண்டும். மாதிரிக்கு ஜவ்வு எடுத்து 'கல்ச்சர்' சோதனை செய்து உறுதி செய்து கொள்ளும் வரை சிகிச்சையை ஒத்திப் போட முடியாது.

"இந் நோய்க்குத் துரிதமாகச் சிகிச்சை அளிக்காமல் விட்டு விட்டால் இதயம், நுரையீரல், மூச்சுக் குழாய், கண்கள் போன்ற வேறு பல உடலுறுப்புக்களையும் பாதிக்கும்."

**"இந் நோய்க்குச் சிகிச்சை என்ன?"**

"ஆன்ட்டி பயாட்டிக் மருந்துகளின் மூலம் பாக்டீரியா கிருமிகளை அழித்து விடலாம். கிருமிகளின் கழிவுப் பொருளான 'டாக்ஸின்' விஷத்தின் கொடிய தன்மை 'ஆன்ட்டி டாக்ஸின்' மூலமாக அகற்றப்படும். இந்த 'ஸீரம்' மருத்துவ மனைகளில் எப்பொழுதும் தயாராக இருக்கும்."

**"இந் நோய் தடுக்கும் முறை என்ன?"**

"டிரிபிள் ஆன்ட்டிஜென் இஞ்செக்ஷன் மூலம் இந்நோய் வராமல் பாதுகாப்பு அளிக்கலாம். டிஃப்தீரியா, கக்குவான் இருமல், டெடனஸ் ஆகிய மூன்று நோய்களும் வராமல் தடுக்க இந்த இன்ஜெக்ஷன் உதவுகிறது. குழந்தை பிறந்து முறையே 3, 4, 5-வது மாதங்களில், மாதம் ஓர் ஊசி போட்டுக் கொள்ள வேண்டும். பின்னர் ஒன்றரை வயதில் ஓர் ஊசியும், நாலு வயதாகும் பொழுது இன்னோர் ஊசியும் போட்டால் போதிய பாதுகாப்பு கிடைத்துவிடும்."

**டாக்டர் ஜெ. விசுவநாத் கூறக் கேட்டு எழுதியவர் ஆர். பி.**

"இதுவரை மாதம் ஐந்து நாட்கள் நான் உலகத்தின் கண்களில் படாது ஒதுங்கியிருந்தேன்.



இப்போது, நான் 'கேர்ஃப்ரீ' ஸானிடரி நாப்கின்களைக் கண்டு பிடித்து விட்டேன். அதனால் மாதம் 30 நாட்களும் ஒன்று போல் கழிக்கிறேன்!"

ஒண்டர்ராப் இணைந்த புதிய 'கேர்ஃப்ரீ' பெண்களுக்கு முழுமையான சௌகரியத்தையும் முழுமையான பாதுகாப்பையும் அளிக்கிறது.

மாதத்தில் அந்த ஐந்து நாட்கள் பெண்களின் உடற்கூற்றைப் பற்றித் தனிப்பட்ட கவனம் செலுத்த வேண்டியது அவசியம். இப்போது 'கேர்ஃப்ரீ' அப்பொறுப்பை ஏற்கிறது.

'கேர்ஃப்ரீ'யின் வெளிப்புறத்தில் உள்ள தன்னிகரற்ற ஒண்டர்ராப் ஈரத்தை நாப்கினின் உட்பாகத்திற்குள் விரைவில் உறிஞ்சி விடுகிறது. அதனால் சருமம் எப்பொழுதும் உலர்ந்து சௌகரியமாக இருக்கிறது.



'கேர்ஃப்ரீ' மட்டுமே சிறந்த முறையில் ஈரப்பசையை உறிஞ்சும் பொருள் கொண்டு தயார் செய்யப் பட்டுள்ளது. அது, ஈரம் நாப்கின் முழுதும் சீராகப் பரவ உதவுகிறது. எனவே ஒரே இடத்தில் ஈரம் படியாமல் தடுக்கிறது. நாப்கினின் அடிப் பாகத்திலும், பக்கப் பாகங்களிலும் ஒரு [illegible] உள்ளது. எனவே கறை படியும் பயம் இல்லை.

'கேர்ஃப்ரீ' எளிதில் கரைவதற்கேற்றது. காரணம், அதனை 'ஃப்ளஷ்' செய்து விடலாம். வெளியில் செல்லும் போதோ, பிரயாணத்தின் போதோ இது மிகவும் வசதியானது. உங்கள் உடலில் கச்சிதமாகப் பொருந்தும்படி மாற்றத் தக்க சைஸில் உருவாக்கப் பட்டுள்ளது. 'கேர்ஃப்ரீ', அதோடு ஒவ்வொரு பாக்கெட்டுடனும் ஒரு 'கேர்ஃப்ரீ' பெல்ட் இலவசம்.

இனி கவலையில்லை!
மாதம் 30 நாட்களும்
ஒன்று போல்
கழிக்கலாம்.

இப்பொழுது
புதிய
கைக்கடக்கமான
பாலிபேகுகளிலே!




தனி, சொந்தமான பொருட்களையே விரும்பும் பெண்களுக்கென்றே புதிய, உயர்தரமான, [illegible] பொருந்தக் கூடிய பெல்ட், தனியாக விற்கப் படுகிறது. 'கேர்ஃப்ரீ' ஸானிடரி நாப்கின் விற்கும் கடைகளில் [illegible]

**ஜான்ஸன் & ஜான்ஸன்***
பெண்மைக்கொரு தூய பாதுகாப்பு.

சவாலைச் சந்தித்தேன்

# ''என்ன யோக்கியதை இருக்கிறது?''

அப்போது நான் பதினைந்து வயதுப் பையன். எங்க ஊர் தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள ஒலக்கூர் கிராமம். நான் சாமானிய விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்தவன்.

இரண்டாம் உலக யுத்த காலம். மில் துணிகளுக்கெல்லாம் ரேஷன். அரிசி ரேஷன் கார்டைக் காண்பித்தால் துணிக் கடைக்காரர், குடும்ப நபர்களின் எண்ணிக்கைக்குத் தகுந்தவாறு மாதத்துக்கு இவ்வளவு கஜம் என்று கொடுப்பார். ரேஷன் கார்டில் அதைப் பதிந்துவிடுவார்.

ஒருநாள் எங்கள் ஊர் ரெவின்யூ இன்ஸ்பெக்டர், மனத்தைக் கவரும் வகையிலான ஒருவித மில் துணியில் ஒரு சட்டை தைத்துப் போட்டுக் கொண்டிருந்தார். எனக்கு அந்த நிமிஷத்திலேயே அதுபோல் ஒரு சட்டை தைத்துப் போட்டுக் கொள்ள வேண்டும் என்ற ஆசை வந்து விட்டது. ஜவுளிக்கடைக்குப் போனேன். ரேஷன் கார்டை நீட்டி, ''முதலாளி! நம்ப ஊர் ரெவின்யூ இன்ஸ்பெக்டர் போட்டிருக்கிறாரே சட்டை... அந்தத் துணியிலே இரண்டரை கஜம் கொடுங்க'' என்றேன்.

கடைக்காரர், ஏளனமாக என்னை ஏற இறங்கப் பார்த்தார். ''அந்த மாதிரி சட்டைபோட்டுக்க உனக்கு என்ன யோக்கியதை இருக்குன்னு கேட்கிறேன்?'' என்றாரே பார்க்கலாம்!

எனக்குச் சுரீரென்றது. அதை ஒரு சவாலாக எடுத்துக் கொண்டேன்.

இரண்டு நாட்கள் கழித்து ஒரு நாள் மாலையில், நான் வேலை பார்த்து வந்த கடை வழியாகப் போய்க் கொண்டிருந்த பக்கத்துக் கிராமவாசியைக் கூப்பிட்டு நிறுத்தினேன். அவர் கையில் துணிப் பொட்டலம் ஒன்று இருந்தது. அவருக்கும் எங்கள் ஊர் ஜவுளிக் கடை தான் ரேஷன் கடை.



அவர் வாங்கிவந்த மல் துணியை வாங்கிப் பிரித்து அளந்து பார்த்தேன். சரியாக நாலு முழம் இருந்தது. ரேஷன் கார்டை வாங்கிப் பார்த்தேன். அதில் நாலு கஜம் கொடுத்திருப்பதாகக் கணக்குக் குறிப்பிடப்பட்டிருந்தது. பாவம் கிராமவாசி! நாலு கஜத் துணிக்கு விலையைக் கொடுத்து விட்டு அதற்குச் சரிபாதியான நாலு முழம் துணியை வாங்கிக் கொண்டு போகிறார்!

வேறு சில அப்பாவி கிராமவாசிகளின் துணிக் கொள் முதலைப் பரிசீலித்துப் பார்த்த போது மோசடி நன்றாகவே விளங்கியது. மேலதிகாரிகளுக்கு ஜவுளிக் கடைக்காரர் செய்யும் அக்கிரமத்தை விவரித்து ஒரு மகஜர் தயாரித்து அனுப்பினேன்.

விசாரிக்க வந்த டெக்ஸ்டைல் அதிகாரியை ஜவுளிக்கடைக்காரர் சரிக்கட்டி விட்டார்.

ஒருநாள் இரவு ஜவுளிக் கடைக்காரர் சம்சாரம் ரயில்வே ஸ்டேஷன் நோக்கி ஒரு பெரிய பெட்டியுடன் போவதைப் பார்த்தேன். கிராமவாசிகளை ஏமாற்றி அமுக்கிய துணியெல்லாம் சென்னைப் பட்டினத்தில் கறுப்புச் சந்தையில் விற்கப் போகிறது!

எனக்கு ஒரே ஆத்திரம். திரும்பி ஊருக்குள் கிராம முனிசிப் வீட்டை நோக்கி ஓடினேன். ஒலக்கூர் தென்னார்க்காடு மாவட்டத்தில் கடைசி ஊர். அதற்கப்புறம் ரயில் செங்கல்பட்டு மாவட்டத்தில் நுழைந்து விடும். ஆகவே ஒலக்கூரில் தான் இந்த சோதனை நடத்த முடியும். கிராம முனிசிப் இந்த அம்மையாரின் பெட்டியைச் சோதனை போட்டுக் குட்டை உடைக்க வேண்டும் என்று விரும்பி முயற்சிகள் எடுத்தேன்.

அந்த அம்மையார் சாமர்த்தியமாகப் பெட்டியைத் தூக்கிக் கொண்டு திரும்பி வீட்டை நோக்கி நடக்க ஆரம்பித்தார்.

ஆனால் இதற்குள் விஷயம் ஊராரிடையே பரவி ஊரே இரண்டுபட்டு நின்றது. சச்சரவுகள் ஓயும் வரை சில நாட்கள் கடையை மூடி வைக்க முதலாளி தீர்மானித்தார். மூடிய கடை மூடினதுதான்; பிறகு திறக்கப்படவேயில்லை.

லஞ்ச ஊழல்கள் அம்பலமாகி அவரை அமுக்கி விட்டன. நான்கு வருடங்கள் கழித்து நான் சென்னைக்கு வந்து உத்தியோகம் தேடிக் கொண்ட பிறகு, சொந்த சம்பாத்தியத்தில் அதே துணியில் சட்டை வாங்கிப் போட்டுக் கொண்டேன். அதைச் சொல்லிக் காண்பித்துக் கொள்ள எங்கள் ஊரில், அந்த ஜவுளிக் கடைக்காரரும் இல்லை! அவர் கடையுமில்லை.

**திரு வி. சௌந்திர ராஜுலு கூறக் கேட்டு எழுதியவர்: பட்டினத்தார்.**





# சேரமான் காதலி

## அத்தியாயம் 2

## வேட்டுவ மகள்

காலை சூரியோதயத்தின்போது மார்த்தாண்ட வர்மனும் மெல்லிளங் கோதையும் காட்டில் ஓடிக் கொண்டிருந்த ஆற்றில் நீராடப் போனார்கள். அந்த ஆறு, மெல்லிளங் கோதையைவிட மென்மையானது.

ஆடையில் இருந்து ஒரு நூலை எடுத்து நீரில் போட்டுப் பார்த்தால்தான் அது ஓடுகிறதா இல்லையா என்பது தெரியும்.

கோதைக்கு அந்த அனுபவம் சுகமாக இருந்தது. மார்பில் இருந்து முழங்கால் வரை ஒரு முண்டு கட்டிக் கொண்டு ஆற்றில் இறங்கினாள்.

சில்லென்றிருந்த தண்ணீரில் அமர்ந்தாள். கோதையின் மேனியைத் தழுவிய நாணத்தில் ஆறு இன்னும் மெதுவாகப் போவது போல் தோன்றிற்று. அவள் குளிக்கும் அழகைக் கண்டு களித்தபடி கவலையை மறந்தான் மார்த்தாண்ட வர்மன்.

துயரங்கள் வரும்போது விம்மி அழவும், அதே நேரத்தில் துயரங்களை உடனே மறக்கவும் சமநிலை பெற்ற வயது.

காடு நாடாகி விட்டது. நாடு மெதுவாக நினைவில் இருந்து நீங்கத் தொடங்கியது. ஆறு அழகாகக் காட்சியளித்

**கண்ணதாசன்**

தது. அதில் குளித்துக் கொண்டிருந்த மெல்லிளங்கோதை அவனுக்குச் சிதையைப் போலவே காட்சியளித்தாள். அவனும் ஆற்றில் இறங்கினான்.

நாணத்துக்குத் தேவை இல்லாத சூழ்நிலை. நாணற் புதர்கள் கரையில் ஒதுங்கி நின்றன. ஆற்றின் நடு நடுவே இருந்த திட்டுக்களில் நாரைகள் மட்டுமே அமர்ந்து அவர்களைப் பார்த்துக் கொண்டிருந்தன.

அவன், அவள் உடலில் தேய்த்துக் குளிக்க மணமிக்க பொடிக் கலவைகள் இல்லை என்பதை உணர்ந்தான். அரண்மனை அந்தப் புரம் நினைவுக்கு வரத்தான் செய்தது. அது ஒரு பெருமூச்சோடு நின்று போயிற்று.

ஒருவர் மீது ஒருவர் நீரை வாரியடித்து விளையாடினார்கள்.

ராஜ பார்வைக்காகக் காத்துக் கொண்டிருப்போர் இல்லை; ஆயிரம் சேதிகள் சொல்லக் காத்துக் கொண்டிருக்கும் அமைச்சர்கள் இல்லை. பொழுது போவதே தெரியவில்லை. நீண்ட நேரம் அவர்கள் குளித்தார்கள்.

அகத்தில் தூய்மை நிறைந்த குலசேகர ஆழ்வாரின் வரிகள், புறத் தூய்மைக்கு அந்த நதியைப் பயன்படுத்திக் கொண்டார்கள்.

ஆழ்வார் அவர்களுக்கு ராமகாதை போதித்த போது, கங்கை நதியைப் பற்றி விவரித்திருந்தார்.

இந்த நதி, அதைவிடக் குறைந்ததாக அவர்களுக்குத் தோன்றவில்லை.

அவர்கள் குளித்து விட்டுக் கரையேறிய போது காட்டுப் பூக்களில் மோதி எழுந்த இளம் காற்று அவர்கள் மேனியைத் தழுவிற்று.

மனிதர்களின் துர்நாற்றம் படாத அந்தக் காற்றில்தான் என்ன இனிமை!

ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியைப் போலவே மார்த்தாண்டவர்மன் நடந்தான். தனது நீண்ட கூந்தலை உலர்த்திய படி மெல்லிளங்கோதையும் அவனைத் தொடர்ந்தாள்.

ஆசிரமத்துக்குள்ளே மெல்லிளங்கோதை நுழைந்து கண்ணாடியைத் தேடினாள். ஆசிரமத்தில் கண்ணாடி ஏது? அவசரத்தில் அவள் அதை எடுத்து வரவில்லை. ஒரு பாத்திரத்தில் தண்ணீரை வைத்து முகம் பார்த்தாள். அவள் திரும்பிப் பார்த்தபோது ஒரு தட்டில் முல்லைப் பூக்களும், குங்குமமும் வைக்கப் பட்டிருந்தன.

யார் அதைக் கொண்டு வந்து வைத்திருப்பார்கள்? ஸ்ரீ வல்லபரின் சீடர்களாக இருக்குமோ!

அவள் அதற்கொரு விசாரணை நடத்த விரும்பவில்லை.

மஞ்சள் முண்டு ஒன்றை எடுத்துக் கட்டிக் கொண்டாள். மார்பின்மீது வெள்ளைக் கச்சை ஒன்றை அணிந்து கொண்டாள். குங்குமம் இட்டுக்கொண்டாள். ''காலை நேரத்துப் பூஜைக்காக ஸ்ரீ வல்லபரின் குடிலுக்குப் போக வேண்டும்'' என்று கூறியபடி திறந்த மேனியோடு, இடையில் வெண்ணிறப் பட்டுக் கட்டியபடி அவள் அருகில் வந்தான் மார்த்தாண்ட வர்மன்.

ஸ்ரீவல்லபரின் ஆசிரமத்திலிருந்து மணியோசை கேட்டது.

அவர்கள் அவசர அவசரமாக அவரது குடிலுக்குள் நுழைந்தார்கள்.

திருவேங்கட நாயகன், கண்ண பெருமான், சீதாப் பிராட்டியோடு நின்ற நிலையில் ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தி — இவர்களது சிலைகளுக்கு எதிரே ஸ்ரீ வல்லபர் அமர்ந்திருந்தார்.

மார்த்தாண்டவர்மனும், மெல்லிளங்கோதையும் அவரது பாதங்களைத் தொட்டு வணங்கி விட்டு இடது புறமாக அமர்ந்தார்கள். சீடர்கள் வலது புறமாக அமர்ந்தார்கள்.

பூஜையைச் சிறிது நேரத்தில் முடித்துக் கொண்டு உபதேசத்தைத் தொடங்கினார் ஸ்ரீவல்லபர்:

குருக்ஷேத்திரத்தில் கௌரவ சைன்யமும், பாண்டவ சைன்யமும் எதிர் எதிராக நின்றன. எதிரே நிற்கும் பாண்டவ சைன்யத்தைப் பார்த்த பிறகு, துரோணாச்சாரியாரின் அருகில் வந்தான் துரியோதனன்.

''குருநாதா,

தங்கள் சீடனும், பேரறிவாளியும், துருபத மன்னனின் மகனுமான திருஷ்டத்யும்னனால் அணிவகுக்கப்பட்டுள்ள இந்தப் பாண்டவர்களின் பெரிய சேனையைப் பாருங்கள்.

இந்தப் பாண்டவ சேனையில் வில் வித்தை வீரர்களும், யுத்த நிபுணர்களும் பீம — அர்ஜுனர்களுக்குச் சமமானவர்களுமான பலர் இருக்கிறார்கள். தேரோட்டியும் குதிரைகளும், தானும் எதிரிகளின் ஆயுதங்களால் அடிபடாமல் பதினாயிரம் வீரர்களோடு போர் செய்யக்கூடிய மஹாரதர்கள் இவர்கள். இவர்களிலே சுபத்திரையின் மகனும், திரௌபதியின் குமாரர்களும் அடக்கம்.

பிராமணோத்தமரே,

இனி நமது சேனையின் முக்கியமானவர்களைத் தெரிந்துகொள்ளுங்கள். அவர்களைத் தங்களுக்கு நினைவு படுத்தவே அறிமுகப்படுத்துகிறேன்.



தாங்கள் இருக்கிறீர்கள். அதோ, பீஷ்மர். அதோ, கர்ணன். அதோ, கிருபாச்சாரியர். அதோ, அசுவத்தாமா. அதோ, விகர்ணன். அதோ, சோமதத்தனின் குமாரன். அதோடு பல்லாயிரக்கணக்கான வீரர்கள். அத்தனை பேரும் எனக்காக உயிரைவிடக் கூடியவர்கள்.''

—இப்படித் துரியோதனன் சொல்லிக் கொண்டிருக்கும்போது வீரச் செம்மலும், குரு வம்சத்து நாயகனும், பாட்டனுமான பீஷ்மர் உரக்கச் சிங்கம் போல் அதிர்ந்து சங்கையும் முழங்கினார்.

பீஷ்மர் அதைத் தொடங்கியதும், துரியோதனன் மகிழ்ச்சி அடைந்தான்.

உடனே சங்குகள் முழங்கின; பேரிகைகள் எழுந்தன; தம்பட்டங்களும், கொம்புகளும் முழங்கின.

எதிர்த்தரப்பில் வெள்ளைக் குதிரைகள் பூட்டிய பெரிய தேரில் அமர்ந்திருந்த கண்ணனும், அர்ஜுனனும் தெய்வத் தன்மை பொருந்திய தங்கள் சங்குகளை முழங்கினார்கள்.

பாஞ்ச ஜன்யம் என்ற சங்கைக் கண்ணன் ஊதினான்.

தேவதத்தம் என்ற சங்கை அர்ஜுனன் ஊதினான்.

அடலேறு பீமசேனன் பௌண்டிரம் என்ற தன் பெரிய சங்கை ஊதினான்.

எல்லா ஒலியும் துரியோதனாதிகளின் இதயத்தைப் பிளந்தது.

போருக்குத் தயாராகிவிட்ட நிலை.

அந்த நேரத்தில் ஆஞ்சநேயரைத் தன் தேர்க் கொடியில் அமரச் செய்தவனான அர்ஜுனன் காண்டீபத்தைக் கையில் எடுத்தவாறு கண்ணனிடம் சொன்னான்:

''அச்சுதா,

சேனைகள் இரண்டுக்கும் நடுவே என் தேரை நிறுத்து. போர் புரிய வந்திருப்போர் யார் யார் என்பதை நான் பார்க்க வேண்டும்.

துரியோதனனின் ஆசைகளுக்குத் துணை போயிருப்பவர்கள் யார் என்பதை நான் காண வேண்டும்.

யாரோடு சண்டையிடப் போகிறோம் என்பதை நான் தெரிந்துகொள்ள வேண்டாமா?''

— அர்ஜுனன் வேண்டுகோளுக்கு, கண்ணன் செவி சாய்த்தான்.

மரகதங்களாலும், மாணிக்கங்களாலும் இழைக்கப்பட்ட அந்த உயர்ந்த ரதத்தை, பீஷ்மர், துரோணர், கௌரவர் அனைவருக்கும் எதிரே நிறுத்தி, 'அர்ஜுனா, அவர்களைப் பார்' என்றான்.

அர்ஜுனன் இருபுறமும் பார்த்தான்.

யார் அங்கே நின்றார்கள்?

தந்தை வழி உறவினர், பாட்டன்மார், ஆச்சாரியர்கள், மாமன்மார்கள், சகோதரர்கள், பிள்ளைகள், பேரர்கள், நண்பர்கள்.

எங்கு திரும்பினாலும் ரத்த பந்த உறவினர்.

அர்ஜுனன் கை நடுங்கிற்று.

''கண்ணா,

போர்க் களத்தில் நிற்கும் என் பந்துக்களைப் பார். என் மேனி தளர்கிறது; வாய் உலர்ந்து போகிறது. உடல் நடுங்குகிறது; மயிர்க்கூச்செடுக்கிறது; காண்டீபம் நழுவுகிறது; நிற்க முடியவில்லை; நெஞ்சம் குழம்புகிறது.

கேசவா,

இது என்ன கெட்ட சகுனம்?

ரத்தபந்த சகோதரர்களைப் போர்க் களத்தில் கொல்வதால் என்ன லாபம்?

கண்ணா,

நான் வெற்றியை விரும்பவில்லை; அரசபோகத்தையோ, ஆனந்தபோகத்தையோ நேசிக்கவில்லை.

ஒரு பூமிக்காகவா உடன் பிறந்தோரைக் கொல்வது ?

ராஜ்ய சுகத்தில் ஆசை வைத்துப் பந்துக்களைக் கொல்லப் புகுந்து பெரிய பாபச் செயலைச் செய்யத் தொடங்கி விட்டோமே !

ஒருவேளை நான் நிராயுதபாணியாக நின்று எதிர்க்காமலும் இருக்கும்போது, ஆயுதபாணிகளான கௌரவர்கள் யுத்தத்தில் என்னைக் கொன்றுவிட்டார்களானால், அதுவே எனக்கு மிகவும் நன்மையாக இருக்கும்.''

— இப்படிக் கூறிய அர்ஜுனன் காண்டீபத்தைக் கீழே எறிந்துவிட்டு, மனம் கலங்கித் தேர்த் தட்டில் உட்கார்ந்து விட்டான்.

— ஆச்சாரியர் ஸ்ரீவல்லபர் இந்த இடத்தில் நிறுத்தியபோதுதான் மார்த்தாண்டவர்மனைத் திரும்பிப் பார்த்தார். அது வரையில் மார்த்தாண்டவர்மன் அழுது அழுது அவன் மார்பு நனைந்திருந்தது.

ஸ்ரீவல்லபர் மெதுவாகச் சிரித்தார்.

''ரத்தம் அப்போதும் பேசிற்று ; இப்போதும் பேசுகிறது'' என்றார்.

மெல்லிளங்கோதை குனிந்த தலை நிமிரவில்லை.

''பரந்தாமன் இதற்கு என்ன பதில் சொன்னான் என்பதை நீ அறிந்தால், அர்ஜுனனைப் போல் நீயும் ஒருவேளை காண்டீபத்தைக் கையில் எடுக்கக் கூடும்'' என்று கூறிவிட்டு எழுந்தார்.

அவர் எழுந்துவிட்டால், அந்த நேரத்துக் கடமை முடிந்து விட்டது என்று பொருள்.

**ஸ்ரீ**வல்லபர் உள்ளே சென்றதும் மார்த்தாண்டவர்மனும், மெல்லிளங்கோதையும் தங்கள் குடிலுக்குப் புறப்பட்டார்கள்.

தூரத்தில் வேட்டுவக் குடிமக்களின் பாட்டொலி கேட்டது.

காலை உணவுகூடக் கொள்ளாத மெல்லிளங் கோதை அந்தப் பாட்டைக் கேட்டபடியே நின்றாள்.

''ஏன், அங்கே போக வேண்டும் போல் தோன்றுகிறதா ?'' என்று கேட்டான் மார்த்தாண்டவர்மன்.

'' நான் போய்ப் பார்த்து வரட்டுமா?'' என்றாள் மெல்லிளங் கோதை.

''தனியாகவா?....'' என்று கேட்டான், மார்த்தாண்டவர்மன்.

''ஏன், நான் இருக்கிறேனே...!'' என்றொரு பெண் குரல் கேட்டது.

இருவரும் திரும்பிப் பார்த்தார்கள்.

அங்கே சிவப்புச் சேலை கட்டியபடி, ஒரு வேட்டுவக் குடி மகள் நின்றாள்.

'' நீங்கள் யார் ?'' என்று கேட்டான் மார்த்தாண்டவர்மன்.

'' நானும் இந்தக் காட்டில் உள்ளவள்தான் !'' என்று பதில் அளித்தாள் அவள்.

''உங்கள் பெயர்...?'' என்று கேட்டாள் மெல்லிளங் கோதை.

''பத்ரை'' என்றாள் அவள். அதோடு, ''என்னை நீங்கள் நம்பலாம்; நம்பியவர்கள் யாருக்கும் நான் துரோகம் செய்ய மாட்டேன்....'' என்றாள்.

மார்த்தாண்டவர்மனுக்கும், மெல்லிளங் கோதைக்கும் அவள் மீது நல்லெண்ணம் பிறந்தது ; ஏதோ ஓர் அன்பு ஏற்படுவது தெரிந்தது.

எடுப்பான தோற்றம்; விரிந்த கூந்தல்; கால்களில் செப்புச் சதங்கை.

''சரி, நீ அவர்களோடு போய் வா'' என்றான் மார்த்தாண்டவர்மன்.

---

ராஜாஜி சிந்தனை

## பரஞ்சோதி

புறத்தேயுள்ள அண்டமானது இத்துணை பெரிதாக இருப்பது போலவே அகத்தேயுள்ள பிண்டமும் அத்துணை பெரிதாகவே காணப்படுகிறது. அதுபோலவே ஒவ்வோர் அணுவும் ஓர் அண்டமாகவே இருந்து வருகிறது. அதனுள் மூலக் கூர்களும் அணுக்களும் எலக்ட்ரான்களும் ஒளியைப் போல வேகமாயும் நட்சத்திரங்களைப் போலவும் கிரகங்களைப் போலவும் அதிக ஒழுங்காகவும் ஒன்றைச் சுற்றி ஒன்று சுழன்று வருகின்றன. புறத்தே வானத்தில் சுழலும் நட்சத்திரங்கள் எவ்வளவு அதிக வேகமுடையனவாக இருக்கின்றனவோ அதுபோலவே அகத்தே அணுவினுள்ள சக்திகளும் அதிக வேகமுடையனவாக உள்ளன. இப்படி உள்ளும் புறமும் அதியற்புதமாக நிகழ்ந்து வரும் இந்த அண்ட சராசரங்களெல்லாம் ஒரு தனிப் பெரும் சக்தியின் தோற்றங்களேயாகும். அதைத்தான் நமது முன்னோர்கள் காயத்ரி மந்திரத்தில் கீழ்க் கண்டவாறு போற்றி வணங்கினார்கள்.

''அளவிட்டு அறிய முடியாத இந்த உலகங்களையெல்லாம் இடைவிடாமல் ஆக்கியும், அசைத்தும், அழித்தும் வருகின்ற அந்தப் பரஞ்சோதியை நான் வணங்குகிறேன். அது என் அகத்தே நிறைந்து என்னைத் தூய்மையாக்குமாக.''

— நட்சத்திரமும் அணுவும் என்ற கட்டுரையில்

# சீரியஸ் சட்டம்; சிரித்து வையுங்கள்!









''இருநூறு ரூபா' 'இருநூறு ரூபா' என்று திருப்பித் திருப்பிச் சொல்றீங்களே எதுக்கு? நான்தான் சார் கல்யாண மாப்பிள்ளை!''

— சாருகேசி

---

அவள் முன்னால் செல்ல, மெல்லிளங் கோதை பின்னால் நடந்தாள்.

அந்த வேட்டுவ மகள் நடக்கும்போது கால் சதங்கை எழுப்பிய ஒலி வெறும் சதங்கை ஒலி போல் மெல்லிளங் கோதைக்குக் கேட்கவில்லை.

அவள் மனத்தில் ஒரு நடுக்கம் பிறந்தது.

திடீரென்று புதரில் இருந்து ஒரு வேங்கை சீறிக் கொண்டு வந்தது.

கோதை பயந்து போய் வேட்டுவ மகளின் தோளைப் பற்றிக் கொண்டாள்.

அந்த வேங்கையையே கூர்ந்து பார்த்தாள் வேட்டுவ மகள். திடீரென்று ஓங்கிச் சிரித்தாள். காடு அதை எதிரொலித்தது. வேங்கை பயந்து ஓடிற்று.

ஓடும்போது பணிந்து வணங்கி விட்டு ஓடுவது போல், கோதைக்குத் தோன்றிற்று.

''திரும்ப என்னை ஆசிரமத்தில் கொண்டு போய் விட்டுவிடு. நான் வர வில்லை'' என்று நடுங்கிக் கொண்டே சொன்னாள் கோதை.

''நீ பயப்படாமல் வாம்மா. இந்தக் காடும், நாடும் நான் சொன்னபடி கேட்கும்!'' என்றாள் அவள்.

கோதைக்குப் போகவும் மனம் இல்லை; திரும்பவும் முடியவில்லை. பிரக்ஞையற்ற நிலையில் பின்தொடர்ந் தாள்.

சுமார் நூறு குடிசைகள் அடங்கிய இடத்தில் வேட்டுவக் குடி மக்கள் பாட்டுப் பாடியபடி தங்கள் கடமைகளை ஆற்றிக் கொண்டிருந்தார்கள்.

ஆமான் புலாலை வேகவைத்துக் கொண்டிருந்தாள் ஒருத்தி.

வேங்கைத் தோல்களை உலர்த்திக் கொண்டிருந்தாள் ஒருத்தி.

பல வகையான கற்களைக் குவித்து நல்ல கற்களைப் பொறுக்கிக் கொண் டிருந்தாள் ஒருத்தி.

வேட்டுவர்கள் யாரையும் அங்கே காணவில்லை.

ஒரு பெரிய குடிசையின் உட்பகுதிக்குக் கோதையை அழைத்துச் சென்றாள் அந்தப் பெண்.

கதவு தானகச் சாத்திக் கொண்டது. உள்ளே ஒரே இருட்டு.

''ஐயோ! ஒரே இருட்டாக இருக் கிறதே...'' என்று கத்தினாள் கோதை.

''தர்மம் பிறகு எங்கே இருக்கு மாம்?'' என்றாள், அவள்.

ஒருவர் முகம் ஒருவருக்குத் தெரிய வில்லை.

''எனக்குப் பயமாக இருக்கிறது'' என்று கத்தினாள் கோதை.

''வெளிச்சம் தானே வேண்டும்; இதோ...!'' என்றாள் அவள்.

திடீரென்று அந்தக் குடிசையில் சிவப்பு வெளிச்சம் படர்ந்தது. அதில் அவள் முகம் தெரிந்தது.

அந்த வெளிச்சம் எங்கிருந்து வந்தது?

வேட்டுவப் பெண் அணிந்திருந்த சிவப்பு மூக்குத்தியை அப்போதுதான் பார்த்தாள் கோதை. அவள் மேனி வியர்த்தது. (தொடரும்)

---

தூக்....தூக்....தூக்.....!

**சில பேருக்கு எழுந்து நிற்பதே பெரிய எடை தூக்கும் *(Weight – Lifting)* பயிற்சியாகி விடுகிறது!** — டெபோனர் - கே. ஆர்.







பாடல் பெற்ற ஸ்தலம், மங்களா சாசனம் செய்யப் பெற்ற ஸ்தலம் என்பது போல் தேச பக்தப் பெருங் கூட்டத்துக்குக் காந்திய ஸ்தலங்கள் பல உண்டு. அவ்வகையில் ராஜ்கோட், காந்தி மகான் கல்வி பயின்ற ஊர் என்பதால் தனிச் சிறப்பு பெறுகிறது.

குஜராத் மாநிலத்தில் மூன்று வகை பண்பாடுகள். அகமதாபாத் சேர்ந்த வட பகுதி வர்த்தகப் பண்பாடு. பரோடா கலைகள் வளர்க்கும் பிரதேசம். மீதப் பகுதியான சௌராஷ்டிரம் ஏழை எளிய பட்டிக்காட்டு மக்கள் வாழும் பகுதி. இன்றைய நவீன நாகரிகத்தினால் அதிகம் பாதிக்கப்படாத பழைய பண்பாட்டைப் பேணி வாழும் மக்களை இங்கு பார்க்கலாம்.

ராஜ்கோட் செய்தித் துறை அதிகாரி திரு ஜோஷியின் உதவியால், சர்க்கார் விருந்தினர் கட்டடத்தில் இடம் பெற்று, அவர்கள் ஜீப்பில் மூன்று நாட்கள் நகர்வலம் வந்தேன்!

• • •

சௌராஷ்டிரப் பகுதியில் முந்நூறுக்கு மேற்பட்ட சுதேச சமஸ்தானங்கள் இருந்தன. சின்னச் சின்ன கிராமங்கள் சேர்ந்தது ஒரு சமஸ்தானம். அதற்கு ஒரு ராஜா. அந்த ராஜாவின் ஆடம்பர வாழ்க்கைக்கே வருமானம் போதாமல் இருக்கும். இந்த லட்சணத்தில் மக்களுக்குக் கல்வி, வைத்திய வசதி, இவையெல்லாம் செய்வதேது? ஆகையால் மக்கள் நூற்றைம்பது ஆண்டுகளாகப் பின் தங்கி வந்திருக்கிறார்கள்

ராஜாக்களே ரொம்பவும் பிற்போக்கானவர்களாகத்தான் இருந்திருக்கிறார்கள். அவர்களது அசட்டுத்தனங்களை விளக்கப் பலப்பல கதைகள் இன்னும் அந்தப் பக்கத்து மக்கள் பேசுகிறார்கள்.

ஒரு ராஜா ஒரு ரேடியோ வாங்கினாராம். இதற்குப் பிரிட்டிஷ் ராஜாங்கத்துக்கு லைசென்ஸ் கட்டணம் செலுத்த வேண்டும் என்றார்களாம். ''காற்றிலே வருகிற சங்கீதத்தை நான் கேட்பதற்கு இவர்களுக்கு எதற்கு நான் கட்டணம் செலுத்த வேண்டும்? பார்க்கப் போனால் பிரிட்டிஷ் அரசாங்கம் தான் எனக்குக் கட்டணம் செலுத்த வேண்டும். என் சமஸ்தானத்தில் உள்ள காற்றில் அவர்கள் சங்கீதத்தை நுழைய விட்டேனே, அதற்காக!'' என்றாராம்.

இப்பகுதி மக்களுக்குக் கத்தியவார் மக்கள் என்று மற்றொரு பெயரும் உண்டு. அவர்கள் தலையில் பெரிய முண்டாசு கட்டியிருப்பார்கள். துணியைச் சுருட்டித் தாம்புக் கயிறு பருமனுக்குச் செய்து கொண்டு அதனைத் தலையில் சுற்றுவார்கள். அந்தப் பெரிய தலைப்பாகையைப் பார்க்கும்போது கிட்டத்தட்ட இருபது கஜம் நீளம் உள்ள துணியாவது அந்த முண்டாசுக்குப் பிடித்திருக்கும். அந்த இருபது கஜம் துணி வாங்க ஏழை பணத்துக்கு எங்கே போவான்? பல துணி



# நகர்வலம்: ராஜ்கோட்





களை முடித்து, முடித்து, அந்த நீளம் செய்து, முண்டாக கட்டிக் கொள்வான். எத்தனை துணித் துண்டுகளைச் சேர்த்து முடிச்சுப் போட்டுத் தலையில் முண்டாக கட்டினாலும், ஒரு முடிச்சாவது வெளியில் தெரியாது. அவ்வளவு சாமர்த்தியமாகக் கட்டுவான்.

அவனுடன் விவகாரம் வைத்துக் கொண்டால் யாருக்கும் தெரியாத சந்தேகங்களையெல்லாம் எழுப்பி விளக்கம் கேட்பானாம். அதனால், ''கத்தியவாரின் தலைப்பாகையில் எத்தனை முடிச்சுக்கள் உண்டோ அத்தனை முடிச்சுக்கள் அவன் தலைக்குள்ளும் உண்டு'' என்று ஒரு பழமொழி வழங்குகிறது.

ராஜகோட் அந்த நாட்களில் சற்று பெரிய சமஸ்தானம். பிரிட்டிஷ் ஏஜெண்ட் துரை ராஜகோட்டில் தங்கி அண்டை அயலில் உள்ள பல சமஸ்தானங்களையும் மேற்பார்வை செய்து வந்தார். காந்தி மகானின் தாத்தா ராஜ்கோட் மன்னரின் திவானாக இருந்தவர்.

அன்னை கஸ்தூரி பாவும் இளமைப் பருவத்தைப் பெரிதும் கழித்தது ராஜகோட்டில்தான். 1939ல் ராஜ்கோட் மன்னராக இருந்தவருக்குத் திருமணம் நிச்சயிக்கப்பட்டபோது, அம்மன்னருக்கு நெற்றியில் திலகம் இட்டு ஆசிர்வதித்ததே அன்னை கஸ்தூரிபாய்தான். அந்த அளவுக்கு ராஜ குடும்பத்துடன் நெருக்கம்.

நாட்டில் 1938ல் எழுந்த சுதந்திரக்கிளர்ச்சி சுதேச சமஸ்தானங்களிலும் எதிரொலித்தது. மன்னர்கள் அடக்குமுறைகளைக் கையாண்டனர். ராஜகோட்டிலும் இந்தத் தீ பரவியது. மக்கள் ஸர்தார் வல்லபபாய் பட்டேலின் மேற்பார்வையில் கிளர்ச்சி நடத்தியதால் மக்களின் எழுச்சியை மன்னரால் அடக்க முடியவில்லை. சர்தாருடன் உடன்படிக்கை செய்து கொண்டார் ராஜகோட் மன்னர். அதன்படி, சர்தார் தேர்ந்தெடுத்துத் தரும் ஏழு பேர்களும், மன்னர் நியமிக்கும் மூன்று பேர்களும் கொண்ட நிர்வாக ஆலோசனைக் குழு அமைப்பது என்பது முடிவு.

இத் தீர்மானத்தில் கையெழுத் திட்ட ராஜ்கோட் மன்னர், சில நாட்களிலேயே வாக்குப் பிறழ்ந்தார். ஸர்தார், ஏழு பேரை நியமிக்கக்கூடாது; நாலு பேர்களைத் தான் நியமிக்கலாம் என்றார்.

மக்கள் கிளர்ச்சி செய்தனர். அடக்குமுறை கட்டவிழ்த்து விடப்பட்டது. அன்னை கஸ்தூரிபாவினால் தாங்க முடியவில்லை. காந்தி தடுத்





□ ஸ்வாமி நாராயண் -சம்பிரதாயத்தைச் சேர்ந்த ஸ்ரீலஸ்ரீ தர்ம ஜீவன்தாஸ் ஸ்வாமியும் அவர் நிறுவியுள்ள குருகுலமும்,

□ இளமைப் பருவத்து மகாத்மாவும் அவர் படித்த பள்ளியும்.

□ மாத்ருசாலா மாணவிகளின் நடன நிகழ்ச்சிகள்.

எஸ்.வி.எஸ்.



ஒரு ஜோக் ரசிக்கப்பட மூன்று பேர் வேண்டும். ஒருவர் சொல்வதற்காக; இன்னொருவர் அதைப் புரிந்துகொண்டு சிரிப்பதற்காக; மூன்றாமவர் புரிந்து கொள்ளாமல் விழிப்பதற்காக!

மூன்றாமவருக்குப் புரியாத ஜோக்கைச் சொன்னவரும் புரிந்துகொண்டவரும் விளக்கிச் சொல்ல முற்படும்போது சுவாரசியம் கூடுகிறது.

லாசா லெட்ரி கூறியது - பிரான்ஸ் சாவர் - சாமி

துப் பார்த்தார்; கேட்கவில்லை. வார்தாவிலிருந்து அன்னை ராஜ்கோட் வந்தார். அவரும் சிறைப்படுத்தப்பட்டார். கிளர்ச்சி இன்னும் வேகம் அடைந்தது. காந்தி மகானே ராஜ்கோட்டுக்குப் புறப்பட்டு வந்தார். மன்னரிடம், ''ஸர்தாருக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாற்றுங்கள்'' என்று கேட்டுக் கொண்டார். பிரிட்டிஷ் ஏஜெண்ட் துரையின் பிடியில் சிக்கியிருந்த மன்னர் சிறிதும் அசைந்து கொடுக்கவில்லை. மக்களின் கிளர்ச்சியை நிறுத்திவிட்டுத் தாமே உண்ணாவிரதம் மேற்கொண்டார் அண்ணல். 'ராஜ்கோட்' உலகப் புகழ்பெற்று விட்டது.

ஸர்தாருக்குக் கொடுத்த வாக்கை மன்னர் காப்பாற்றவில்லை என்பதற்காகக் காந்தி மகான் உண்ணாவிரதம் இருந்தார். மன்னர்களுக்குப் பாரத நாட்டு மக்களின் சார்பில் ஸர்தார் அளித்த வாக்குறுதியை நாம் தூக்கி எறிந்தோமே, அது காந்தி மகான் நம்மிடையே இல்லை என்ற தைரியத்தில்தானோ?

இன்றைய ராஜ்கோட் எப்படி இருக்கிறது? தேன் கூடு போல் மிகச் சுறுசுறுப்பாக இயங்குகிறது. குஜராத் மாநிலத்திலேயே சிறு கைத்தொழில் துறையில் முன்னணியில் நிற்கிறது. 1973–74ல் ஐந்து கோடி ரூபாய் பெறுமானத்துக்கு ஆயில் என்ஜின்கள் ஏற்றுமதி செய்திருக்கிறார்கள். ராஜ்கோட் நகரம் முழுதும் எங்கு பார்த்தாலும் ஆயில் என்ஜின்கள் செய்யும் பட்டறைகளைப் பார்க்கலாம்.

''இந்தப் பகுதியைப் பார்க்கும் போது பம்ப் செட்டுக்குப் பெயர் போன எங்கள் கோயமுத்தூர் நினைவுக்கு வருகிறது'' என்றேன் நண்பர் ஜோஷியிடம்.

''உங்கள் கோயமுத்தூர்ப் பகுதியைச் சேர்ந்த ஒருவர் – இங்கு ஆயில் என்ஜின்கள் செய்கிறார்'' என்றார். அவரைச் சந்தித்து அளவளாவிவிட்டுத் திரும்பினேன்.

ராஜகோட்டில் பால் பாயிண்ட் பென்சில்களுக்குப் போடும் மை நிரப்பிய பில்லர் தொழிற்கூடம் இருக்கிறது. மிக நுட்பமான கருவிகளைக் கொண்ட ஓர் அழகிய இயந்திர சாலை இது.

மற்றொரு தொழிற்கூடம் அழுத்தம் கொடுத்துக் கற்கள் தயாரிப்பது. சாதாரண களி மண்ணையும் சிறிது மணலையும் தண்ணீர் கலந்து பிசைந்து, இரண்டு செங்கல் அளவுக்கு அச்சுள்ள இயந்திரத்தில் இட்டுக் குறிப்பிட்ட அழுத்தம் கொடுத்தவுடன் உறுதியான கல்லாகி விடுகிறது. இப்படி அழுத்தம் கொடுத்து இறுக்கும் இயந்திரம் நாலாயிரம் முதல் ஐயாயிரம் வரை ஆகிறது. இதை ராஜகோட்டில் செய்கிறார்கள். கேரள அரசாங்கம் இந்த எளிய இயந்திரங்களை வாங்கிப் பயன்படுத்தி வருவதாக அத்தொழிற்கூடத்தின் அதிபர் கூறினார்.

ராஜகோட் தொழில் வளர்ச்சிக்குத் தமிழ் நாட்டிலிருந்து பரவிக் கிளைகள் வைத்துள்ள பாங்குகள் பெரிதும் உதவியுள்ளன. பல சிறு தொழில் அதிபர்கள், இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்கின் மானேஜர் திரு ஆர். சீனிவாசனைப் பாராட்டினார்கள். தொழில் செய்ய வேண்டும் என்ற ஆர்வம் இருந்து எப்படித் தொடங்குவது என்று தெரியாமல் தவிக்கும் நபர்களைத் தேடிப் பிடித்து ஊக்குவிக்கிறார். பாங்கு தரக் கூடிய வசதிகளை யெல்லாம் எடுத்துச் சொல்கிறார். தொழிலில் சிக்கல் ஏற்படும் போது யோசனைகள் கூறி உதவுகிறார் ஆர். சீனிவாசன்.

''இந்தப் பக்கத்து மக்களுடன் பழகியதில் உங்களுக்கு விசேஷப் பண்பாக என்ன தோன்றுகிறது?'' என்று கேட்டேன்.

''அவர்களுடைய விருந்தோம்பல்தான் ஸார். எந்தத் தூரத்துக் கிராமத்துக்குப் போனாலும் நமக்கு வயிறாரச் சாப்பாடு போடாமல் அனுப்பமாட்டார்கள்'' என்றார் நண்பர் ஆர். சீனிவாசன்.

நண்பர் ஜோஷி, ''சீனிவாசன் சொல்வதில் ஒரு பாரம்பரியப் பண்பாட்டு உண்மை இருக்கிறது'' என்றார். ''இந்தப் பக்கங்களில் அண்ணன் தம்பி கடுமையாகச் சண்டை போட்டுக் கொள்வார்கள். ஒருவர் வீட்டுக்கு ஒருவர் போய்விட்டால் வயிறு நிறைய சாப்பாடு போட்டு உபசாரம் செய்வார்கள். பிறகு வெளியில் வந்து சண்டை போட்டுக் கொள்வார்கள். இதையொட்டி ஒரு பழமொழியும் வழங்கி வருகிறது!'' என்றார்.

குஜராத் மாநிலத்தில் முக்கியமான மதங்கள் வைணவமும் ஜைனமும்தான். எனினும் ராஜகோட்டில் முக்கியமாக என்னைக் கவர்ந்தது ''சுவாமி நாராயண்'' சமய மரபைச் சேர்ந்தவர்களின் பெருந் தொகை.

பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் உத்தரப் பிரதேசத்தில் பிறந்த சுவாமி நாராயண் தமது பதினோராம் வயதில் தாயையும் தந்தையையும் ஒருங்கே இழந்தார். அதற்குப் பின் உண்மையை நாடித் தேச சஞ்சாரம் செய்து, 'லோஜ்' என்னும் இடத்தில் ராமானந்தரைச் சந்தித்து தீக்ஷை பெற்று அவருக்குப் பின் ராமானந்தரின் பீடத்துக்குத் தலைமை தாங்கினார். அதாவது இருபது வயதில் மடாதிபதியானார். இவர் புது மதம் ஒன்றும் போதிக்கவில்லை. சம்பிரதாயமான வைணவ மதத்தைச் சார்ந்தவர்தான். ஆனால் இவர் வாழ்க்கையில் நடத்திய அதிசயங்கள், பக்தர்கள் இவரையே தெய்வமாகக் கொண்டாட வைத்து விட்டன. சௌராஷ்டிரப் பகுதியில் இருந்த கடும் கொள்ளைக் கூட்டத்தினரைத் திருத்தி நல்வழிப்படுத்திய அதிசயத்தைக் கேள்விப்பட்டு பம்பாய் கவர்னர் சுவாமிகளை நேரில் சந்தித்து நன்றியும் வணக்கமும் செலுத்தியிருக்கிறார். இப்படிப்

## நெஞ்சை விட்டு நீங்காத காட்சி

**திரு ஜெய்சங்கர், அபர்ணா நடித்த ''துணிவே துணை''** என்னும் திரைப் படத்தில் உங்கள் நெஞ்சை விட்டு நீங்காத காட்சி எது என்று குறிப்பிட்டுச் சுருக்கமாக ஒரு தபால் கார்டில் எழுதி யனுப்பவும். 6-5-76 தேதிக்குள் கிடைக்கும் கடிதங்களை மட்டுமே பரிசீலிப்போம். எந்தக் காட்சி அதிகமான வாசகர்கள் மனத்தைக் கவர்ந்துள்ளதோ அந்தக் காட்சி பற்றி டைரக்டர் எஸ். பி. முத்துராமன் தம் அனுபவங்களைக் கல்கி நேயர்களுடன் பகிர்ந்து கொள்வார். உங்கள் மனம் கவர்ந்த காட்சி பற்றி டைரக்டரை என்ன கேட்க விரும்புகிறீர்கள் என்பதையும் தெரியப்படுத்தலாம்.



பல அதிசயங்கள் நிகழ்த்திய சுவாமி நாராயணன், தமது சிஷ்யர்களுக்குப் பல கடுமையான நியமங்களை ஏற்படுத்தி யிருக்கிறார். கண்ணனுக்குப் பல கோயில்கள் கட்டியிருக்கிறார். சீடர்கள் இவரையே கண்ணனின் அவதாரமாகப் போற்றி வணங்கத் தலைப்பட்டு விட்டனர்.

சுவாமிகள் ஒரு சமயம் ராஜகோட்டுக்கு விஜயம் செய்து ஓர் இலந்தை மர நிழலில் அமர்ந்திருந்தார். ''ஓ! இலந்தை மரமே, சுவாமியைப் பார்த்த பின்னும் உன் துர்ச்சுபாவத்தை மாற்றிக் கொள்ளாமல் இருக்கிறாயே!'' என்று மக்கள் கேட்டார்களாம். உடனே இலந்தை மரம் தன் முட்களை யெல்லாம் உதிர்த்து விட்டதாம். ராஜகோட்டில் சுவாமி நாராயண் கோயிலில் இருக்கும் இலந்தை மரத்தில் இன்றும் முட்கள் இல்லை!

சுவாமி நாராயண் சம்பிரதாயத்தைச் சேர்ந்த சந்நியாசிகள் பெண்களை ஏறெடுத்தும் பார்க்கமாட்டார்கள்.

ராஜகோட்டில் சுவாமி நாராயண் சம்பிரதாயத்தைச் சேர்ந்த தர்ம ஜீவன்தாஸ் ஸ்வாமி அருமையான குருகுலம் ஒன்று நடத்தி வருகிறார். நவீனப் பயிற்சி முறைகளுடன் நமது பழம் பண்பாடு, சமயம், ஆசாரம் ஆகியவற்றையும் மாணவர்களுக்குச் சொல்லிக் கொடுக்கிறார்கள்.

**ரா**ஜகோட்டில் ஆகாகானைக் குருவாகக் கொண்ட கோஜா இஸ்மெயிலி வகுப்பார், அநாதைப் பெண் குழந்தைகளுக்காக ஓர் ஆசிரமம் நடத்துகிறார்கள்.

இந்த ஆசிரமத்துக்கு மாத்ரு சாயா — அன்னையின் நிழல் — என்ற நல்ல சம்ஸ்கிருதப் பெயர். அநாதைப் பெண், தாய் இல்லையே என்ற உணர்ச்சியோ தாபமோ இல்லாமல் வளர வேண்டும் என்பது ஆச்ரம நோக்கம். பெண் படித்து முடித்ததும், ஆச்ரமமே நல்ல வரனாகப் பார்த்து, குடித்தனத்துக்கு வேண்டிய பாத்திரங்கள், கட்டில் மெத்தை, ரேடியோ ஆகிய சீர் செனத்திகளுடன் கல்யாணம் செய்து வைக்கிறது. அப்படிச் சமீபத்தில் நடத்தி வைக்கப்பட்ட திருமணப் போட்டோ ஆல்பத்தைக் காட்டினார்கள். சீர் வரிசைப் போட்டோக்களைப் பார்த்த போது தலை சுற்றியது! அவ்வளவு சீர் வரிசை!

ஆசிரம நிர்வாகம் முழுதும் மாணவிகளே நடத்துகிறார்கள். பெருக்குவது, மெழுகுவது, பாத்திரம் தேய்ப்பது, துவைப்பது, எல்லாம் அப்பெண்களே!

ஆச்ரமம் முழுவதையும் சுற்றிக் காண்பித்தனர். எங்கு பார்த்தாலும் சுத்தம் சுத்தம் தான் காணப்பட்டது. கடைசியாக ''எங்கள் சமையல் அறையையும் பார்த்து விடுங்களேன்'' என்றார்கள்.

''வேண்டாமே! நீங்கள் முஸ்லிம்கள். மாமிச உணவைச் சாப்பிடுபவர்கள்...'' என்று தயங்கினேன்.

''பதினைந்து நாட்களுக்கு ஒரு முறைதான். இன்று அவை ஒன்றும் இல்லை — வாருங்கள்!'' என்றார்கள்.

போனால் சுத்தமாக இருந்தது. பார்ப்பதற்குச் சமையல் அறை போலவே தோன்றவில்லை. இதன் அருமை ஒரு நாளைக்கு எண்ணாயிரம் சப்பாத்திகள் தயாராகும் இடம் என்பதை எண்ணிப்பார்த்தால் புரியும்!

தமிழகத்திலிருந்து வந்திருந்த எனக்கு, அப் பெண்கள் பூர்வமான குஜராத்தி நாட்டிய வகையைச் சேர்ந்த காப்ரா டான்ஸ் முதலிய பல குஜராத்திய நடன நிகழ்ச்சிகளை அரை மணி நேரத்துக்கு ஆடிக் காட்டிக் கலை விருந்தும் அளித்தார்கள்.

அன்னையின் நிழலில் சற்று ஒதுங்கிப் பார்க்க நினைத்த எனக்கு அது எங்கும் கிடைக்காத குளிர்ச்சி மிகுந்த நிழல் என்பதைப் புலப்படுத்திவிட்டார்கள் சிறுமிகள்!

**ரா**ஜகோட்டில் இரண்டரை நாள் இருந்து குறுக்கும் நெடுக்குமாகப் போன போது ''மோகன்தாஸ் காந்தி ஸ்கூல்'' என்ற பெயர் கண்களில் அடிக்கடி பட்டு வந்தது. முன்னே இதற்கு ஆல்பிரட் ஸ்கூல் என்று பெயர். காந்தி இந்தப் பள்ளியில்தான் படித்தார். அதனால் அவர் பெயர் இட்டிருக்கிறார்கள்.

காந்தி படித்த அந்தப் பள்ளியைப் பார்த்த போது காந்தியப் பள்ளியில் நாம் படிக்க வேண்டியது இன்னும் எவ்வளவோ இருக்கிறது என்ற எண்ணம்தான் மேலோங்கியது!

# பொன்னியின் புதல்வர்



சுந்தா

## 31. தமிழ்த் தொண்டும் தலைமையும்

**தொண்டிலே சிறப்பு –தொண்டினுல் சிறப்பு
தொண்டரிலே தொண்டர்-தலைவரிலே
தலைவர்**

தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் வெளியீடான ''கலைக்களஞ்சியம்'' தமிழ்ப் புத்தகங்களிடையே அறிவுக் கருவூலமான அரிய பெரிய சாதனை. பத்துத் தொகுதிகள் கொண்ட இந் நூலின் இரண்டாம் தொகுதி கல்கியின் நினைவுக்குக் காணிக்கையாகி யிருக்கிறது. எந்த வகைக்காக என்பதைக் கழகத்தின் தலைவர் தி. சு. அவினாசிலிங்கம், இந்தத் தொகுதியின் முகவுரையில் சொல்லி இருக்கிறார்:



✖ தமிழ்வளர்ச்சிக் கழகத்தின் சின்னம்.



✖ கலைக் களஞ்சியம் தொடக்கக் கூட்டம். கல்கி பேசுகிறார். பக்கத்தில் அவிநாசிலிங்கம், ஏ. எல். முதலியார்.

ஆரம்பத்திலிருந்து தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் செயலாளர்களில் ஒருவராக இருந்து அண்மையில் காலஞ்சென்ற கல்கி ஆசிரியர் திரு ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களைத் தமிழ் உலகம் நன்கு அறியும். அவருக்கிருந்த தமிழன்பு மிகப் பெரியது. அவர் தமிழுக்குச் செய்துள்ள சேவை மறக்க முடியாதது. அவர் மறைவால் தமிழகம் ஓர் அரிய அன்பரை இழந்தது. தமிழ் வளர்ச்சிக் கழகமும் தனது வலக்கரம்போல் இருந்த ஒருவரை இழந்திருக்கிறது. தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் செயலாளராக இருந்தது. அதன் வளர்ச்சிக்கும் கலைக்களஞ்சியப் பணிக்கும் அவர் செய்த உதவி அளவில்லாதது.

இந்த அஞ்சலி அடங்கிய இரண்டாம் தொகுதி, கல்கி காலமாகி நாலு மாதங்களுக்குப் பிறகு வெளியானதாகும். அதற்குச் சரியாக ஓராண்டுக்கு முன்னால், 1954 ஏப்ரலில், முதல் தொகுதி வெளியாயிற்று. அதைப் பார்த்துக் கல்கி அடைந்த மகிழ்ச்சி, அவருடைய பாராட்டுடன் கலந்து, துணைத் தலையங்கம் ஒன்றில் பொங்கி வந்தது:

ஆறு ஆண்டுகளுக்கு முன்னால் திரு டி.எஸ். அவிநாசிலிங்கம் கல்வி மந்திரியாய் இருந்தபோது, அவருடைய பெருமுயற்சியினால் ''தமிழ் வளர்ச்சிக் கழகம்'' ஆரம்பிக்கப்





கீழே :

✖ கே. சுவாமிநாதன், காரியதரிசி, தமிழ் வளர்ச்சிக் கழகம்.

மேலே :

✖ தூரன்-கலைக் களஞ்சியம் ஆசிரியர்.





இடது :
✱ ஆக்கூர் அனந்தாச்சாரி, காரியதரிசி பாரதியார் சங்கம்.

வலது :
✱ பாரதி பொருட் காட்சி அமைத்த ஆர். ஏ. பத்மநாபன்.

பட்டது. ''தமிழ் இதுகாறும் வளராமலா இருந்து வருகிறது? இவர்கள் என்ன புதிதாய்த் தமிழை வளர்த்துவிடப் போகிறார்கள்?'' என்றும், ''தமிழ்த்தாய் ஏற்கனவே கிழவியாகி விட்டாள்; அவளை இன்னும் வளர்ப்பது எப்படி?'' என்றும் அக்காலத்தில் சிலர் கேலி செய்ததுண்டு. இவற்றைப் பொருட்படுத்தாமல் தமிழ் வளர்ச்சிக் கழகத்தார் தங்கள் முயற்சிகளைச் செய்து வந்தார்கள். ஆண்டு தோறும் தமிழ் விழா நடத்தினார்கள்; பல துறைகளிலும் வெளியான புதிய தமிழ்ப் புத்தகங்களுக்குப் பரிசுகள் வழங்கினார்கள். (ஆறு புத்தகங்களுக்கு ஐந்நூறு ரூபாய் வீதம்.)....

ஒவ்வொருவருடைய வாழ்க்கையிலும் சில அரிய சந்தர்ப்பங்கள் கிடைக்கின்றன. அப்படிக் கிடைக்கும் சந்தர்ப்பங்களை தக்கபடி உபயோகிப்படுத்திக் கொள்வதில் தான் மனிதனுடைய ஆற்றல் வெளியாகிறது. ஸ்ரீ டி. எஸ். அவிநாசிலிங்கம் அவர்களுக்கு ஆறு ஆண்டுகளுக்கு முன்பு அத்தகைய சந்தர்ப்பம் ஒன்று வாய்த்தது. அதை அவர் நன்கு பயன்படுத்திக் கொண்டு தமிழ்த் தாய்க்கு இந்த அரும் பெரும் பணியைத் தொடங்கினார். தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் அங்கத்தினர்கள் பலர் அவருடன் ஒத்துழைத்து உதவிய போதிலும், ஸ்ரீ டி. எஸ். அவினாசிலிங்கம் அவர்களே அக் கழகத்தின் பாரம் முழுவதையும் தனிப் பொறுப்பாகத் தாங்கி வந்தார். ஆனால் ''கலைக்களஞ்சியம்'' வெளியிட்ட பெருமையை அவருடன் பகிர்ந்து கொள்ளக் கூடியவர் ஒருவர் உண்டு. அவர் ஸ்ரீ பெரியசாமித் தூரன்.

உயர்தரப் பள்ளியின் (கோயமுத்தூரில் ஸ்ரீ ராமகிருஷ்ண வித்தியாலயம்) தலைமை ஆசிரியராக இருந்து பணியாற்றியவர் ஸ்ரீ பெரியசாமித் தூரன். அதை விட்டுக் ''கலைக் களஞ்சியம்'' திருப்பணியை ஒப்புக் கொண்டார். அல்லும் பகலும் பொறுமையுடனும் இடைவிடா ஊக்கத்துடனும் உழைத்தார் .... அவருடைய இணையற்ற உழைப்பின் பயனாகவே இப்போது ''கலைக் களஞ்சியம்'' முதற் பகுதி வெளியாகி யிருக்கிறது.

(கல்கி இதழ் 18-4-54)

''கலைக் களஞ்சியம்'' தலைமைப் பதிப்பாசிரியர் பதவியைத் தாம் அடைவதற்கு, அவிநாசிலிங்கத்துடன் கல்கியும் பெரிதும் காரணமாவார் என்று தூரன் சொல்கிறார். எப்படி எப்படி விஷயங்களை வெளியிட வேண்டும் என்பதில், பத்திரிகை அனுபவத்தைக் கொண்டு கல்கி தெரிவித்த யோசனைகள் தமது பதிப்பு வேலைக்கு வெகுவாகப் பயன் பட்டன என்றும் அவர் கூறுகிறார்.

கலைக்களஞ்சியத்தை உருவாக்குவதில் தொடக்க காலம் முதல் சம்பந்தப்பட்டிருந்த பேராசிரியர் கே. சுவாமிநாதன், எல்லாம் எளிய நடையில் இருக்க வேண்டும் என்று கல்கி திரும்பத் திரும்ப வற்புறுத்திக் கொண்டிருந்தார் என்பதைச் சிறப்பாகக் குறிப்பிடுகிறார். கல்கியை அடுத்து அக்கழகச் செயலாளர் பொறுப்பைத் தாம் ஏற்றபோது பல காரியங்களை அவர் தெளிவாக்கி முறைப்படுத்தி வைத்திருந்ததைக் கண்டதாயும் பேராசிரியர் சொல்கிறார்.

தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் ஏற்பாட்டில் மதுரையிலிருந்து தொடங்கி டெல்லி வரை, ஆறு நகரங்களில் தமிழ் விழாக்கள் நடைபெற்றன. அவற்றில் கல்கியின் பங்கும் பணியும் எவ்விதமாயும் எவ்வளவாயும் இருந்திருக்கும் என்பதை, யாழ்ப்பாணம் விழாப் பற்றி ஏற்கனவே நாம் தெரிந்து கொண்ட விவரத்திலிருந்து அனுமானித்துக் கொள்ளலாம்.

அந்தக் கழகத்தின் நடவடிக்கைகளில் ஈடுபட்டிருக்கையிலேயே, பாரதியார் சங்கத்தின் தலைவர் பதவியிலும் கல்கி







இடை :
✱ புத்தனேரி சுப்பிரமணியம்.

மேலே :
✱ ப. கோதண்டராமன்.

மேலே :
✱ ஆர்வி — தமிழ் எழுத்தாளர் சங்கக் காரியதரிசிகள்.



# மோசம்!

மனைவியின் பிறந்த நாளை ஞாபகம் வைத்துக் கொள்ளாமல் அவள் வயதை மட்டும் நினைவில் வைத்துக்கொள்ளும் கணவன் மோசமானவன்.

ஹோரேஸ் — முத்து

---

பணியாற்றிக் கொண்டிருந்தார். பாரதி அன்பர்கள் பலரை உறுப்பினர்களாய்ச் சேர்த்துக் கொண்டு அவரே நிறுவி, 1949 மார்ச்சு மாதத்தில் முறைப்படி பதிவு செய்த சங்கம் அது. அதன் ஆதரவில் மூன்றுண்டு காலம் எட்டயபுரத்தில் பாரதி விழா நடைபெற்றது. பின்னர் சில காரணங்களைக் கருதி, அந்தச் சங்கத்தைச் சென்னை நகரிலேயே இயக்குவித்துப் பெரிதாகப் பாரதி விழாக்கள் நடத்தினர். முதலில் பெரியசாமித் தூரன் அதன் செயலாளராகச் சிறிது காலம் இருந்தார். அவரை அடுத்து, தேசபக்தர் ஆக்கூர் அனந்தாச்சாரி அப் பொறுப்பை ஏற்றார். நாடக நடிகர்—பாடகர் எஸ். ஜி. கிட்டப்பாவின் நண்பரான அவர், அந்தப் புகழ்மிக்க கலைஞரின் நினைவாக இலவசப் பாடசாலை ஒன்றை ஹிந்தியும் இசையும் கற்றுக்கொடுப்பதற்காக நிறுவி, ''அரிய பெரிய பணியை நடத்தி வருபவர்'' என்று கல்கியால் பாராட்டப் பெற்றவர்.

அவருடைய செயலாற்றலையும் கல்கியின் இயக்கத் திறனையும் கொண்டதான பாரதியார் சங்கம், 1953-ல் இந்திப் பிரசார சபைக் கட்டடத்தில் நடத்திய விழாவிலே, பாரதி பொருட்காட்சி ஒன்று சிறப்பான அம்சமாய் இருந்தது. முதல் தடவையாய் நடந்த அந்தக் காட்சியை அமைத்தவர் ரா. அ. பத்மநாபன். அதிலிருந்த பாரதி நினைவுப் பொருள்களான, படங்கள், கையெழுத்துப் படிகள், ''இந்தியா'' ஏடுகள், முதற் பதிப்புகள் முதலானவை, பல ஆண்டுகளாய்ப் பல இடங்களிலிருந்து அவர் திரட்டிப் பாதுகாத்து வைத்திருந்தவை. அந்த நினைவுப் பொருள்களே பின்னர் 1957-ல் அமுத நிலைய வெளியீடான ''சித்திர பாரதி'' என்ற அற்புதமான நூலை அவர் படைத்தளிக்க ஆதாரமாயின.

இந்த நூலின் முன்னுரையிலும் நன்றியுரையிலும் கல்கியும் ஆசிரியரும் சம்பந்தப்பட்டதாய் இரண்டு குறிப்புக்கள் உள்ளன:

''கல்கி'' ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள், பத்திரிகைத் துறையில் எனது முதல் ஆசிரியர்; பத்திரிகைத் துறைக்கு என்னைக் கொண்டு வந்தவர்; அதே போல் பாரதித் துறையிலும் நான் ஈடுபடக் காரணமானவர்....

1934-ம் ஆண்டு, நான் ஆனந்தவிகடனில் உதவியாசிரியராக இருந்த சமயம், முதன் முதலாகப் பாரதியார் புகைப்படம் ஒன்றைப் பார்த்தேன். புதுவை அன்பர் எஸ். ஆர். சுப்பிரமணியம் கொண்டு வந்து கொடுத்த அப்புகைப் படத்தைப் பிரதியெடுத்துத் தரும்படி ஆசிரியர் கல்கி பணித்தார். அப்போது எடுத்த அப்படத்தின் பிரதிகள் பிற பத்திரிகைகளுக்கும் உதவப்பட்டன. என்னிடம் வந்து சேர்ந்த முதல் பாரதிச் சின்னம் என்று இதைக் கூறலாம்.

அந்த முதல் பாரதிச் சின்னம், வேறு பல சின்னங்களைப் பத்மநாபன் தேடிச் சேகரிப்பதற்கு ஊக்கம் ஊட்டியதுடன், பாரதியாரின் உருவம் அவருடைய கவிதையுடன் சேர்ந்து பரவி மக்களின் மனத்தில் பதிவதற்கு வகையும் செய்தது.

பாரதியார் சங்கத்தின் ஆதரவில் முதலாவதாய் அமைத்த பொருட்காட்சியைப் பின்னர் பிற சங்கங்களின் ஆதரவில் வெவ்வேறு இடங்களில் பத்மநாபன் நடத்திக் கொண்டிருந்தார்; அதில் மேலும் மேலும் பொருள்களைத் தேடிச் சேர்த்துக் கொண்டும் இருந்தார்.

பாரதியார் சங்கம் கல்கியின் தலைமைக் காலத்தில் தனியாருக்குச் செய்த உபகாரங்களும் சில உண்டு. அவற்றில் ஒன்று, பாரதியாரின் தாய்மாமன் சாம்பசிவ அய்யருக்கு, வயோதிக கால வறுமையின் கொடுமையைத் தணிப்பதற்காகப் பண உதவி அளித்ததாகும்.

(கல்கிக்குப் பிறகு, அடுத்தடுத்துப் பல அன்பர்களின் பொறுப்பில் தொடர்ந்து இயங்கி வந்துள்ள பாரதியார் சங்கத்தை, இப்போது நா. மகாலிங்கம் தலைவராகவும் பகீரதன் செயலாளராகவும் இருந்து சிறப்பாகப் பேணி வருகிறார்கள்; ஆண்டுதோறும் பாரதிவிழாவைக் கொண்டாடுவதுடன், சங்கத்தை நிறுவிய கல்கியின் நினைவுநாளையும் கொண்டாடுகிறார்கள்.)

பாரதியார் சங்கத்தை அமைத்து வளர்த்துக் கொண்டிருக்கையில், ''பாரதி விடுதலைச் சங்கம்'' என்ற குழு ஒன்றின் முயற்சிகளில் கல்கி பங்கு கொண்டார். வ. ரா., நாரண துரைக்கண்ணன், திரிலோக சீதாராம், பேராசிரியர் சீநிவாச ராகவன் முதலானோர் அடங்கிய அந்தச் சங்கம், பாரதியாரின்

இலக்கியப் படைப்புக்களைப் பொது உடைமை ஆக்குவதில் முனைந்து, அப்போது சென்னை மாகாணப் பிரதம மந்திரியாய் இருந்த ஓமந்தூர் ராமசாமி ரெட்டியாரிடம் தூது சென்று அவருடைய உதவியை நாடிற்று. அதன் பேரில் ரெட்டியார் மேற்கொண்ட நடவடிக்கையின் பயனாக, பாரதியாரின் சகோதரரும் பாரதி பிரசுராலயத்தின் சொந்தக்காரருமான சி. விசுவநாதய்யர், கவிஞரின் நூல்களைப் பதிப்பிக்கும் உரிமையை, பதினைந்தாயிரம் ரூபாய்க்குச் சென்னை அரசிடம் ஒப்படைத்தார். படாதிபதி ஏ. வி. மெய்யப்பன், பாரதியார் பாடல்களை ஒலிப்பதிவு செய்து பயன்படுத்துவதற்காக சுராஜ்மல்லிடமிருந்து பத்தாயிரம் ரூபாய்க்கு வாங்கியிருந்த உரிமையை, நன்கொடையாகவே அரசுக்கு எழுதிக் கொடுத்து விட்டார்.

பாரதி இலக்கியத்தைத் தமது பொறுப்பிலேயே வெளியிடத் தீர்மானித்த அரசினர், அதற்கான பதிப்புக் குழுவில் கல்கியைச் சேர்த்துக் கொண்டனர். பேராசிரியர்கள் ரா. பி. சேதுப்பிள்ளை, கே. சுவாமிநாதன் ஆகியோரும் சி. விசுவநாதய்யரும் அவருடன் அக்குழுவில் இருந்தனர். அவர்கள் பதிப்பித்த பாரதியார் கவிதை நூல் 1954 இறுதியில் வெளியாயிற்று.

அதற்கு முந்திய ஆண்டு இறுதியில், பெரியசாமித் தூரன் தொகுத்த ''பாரதித் தமிழ்'' என்ற அரிய நூல் பிரசுரமாயிற்று. பழைய சுதேசமித்திரன் இதழ்களிலிருந்து பாரதியாரின் கவிதைகள் கட்டுரைகளைத் தேடி எடுத்து, ஒப்புநோக்கி, ஆராய்ச்சிக் குறிப்புக்களுடன் தொகுத்த நூல் அது: பாரதி பக்தியுடன் நெடுங்காலம் தூரன் உழைத்த உழைப்பின் பலன். அந்த நூலை வெளியிடுவது சம்பந்தமாய் உண்டான சில ஐயங்களைத் தீர்ப்பதற்குக் கல்கி உதவியாய் இருந்தார் என்று தூரன் தெரிவிக்கிறார்.

பாரதித் துறையில் சிறப்பாய்ச் சாதனைகள் புரிந்த பெரியசாமித்தூரனுக்கும் ரா. அ. பத்மநாபனுக்கும் 1954 பிப்ரவரியில் சென்னையில் நடைபெற்ற இரண்டாவது தமிழ் எழுத்தாளர் மகாநாட்டில், தங்கப் பதக்கங்கள் அளிக்கப் பெற்றன. தமிழ் எழுத்தாளர் சங்கம் நடத்திய அந்த மகாநாட்டில், தமிழ்ப் புலமைக்காகப் பேராசிரியர் சேதுப்பிள்ளைக்கும், நெடுங்கால எழுத்துப் பணிக்காக வே. சாமிநாத சர்மாவுக்கும், வெள்ளிக் கேடயங்கள் வழங்கப்பட்டன.

அவ்வாறு அந்நால்வரையும் கௌரவிக்கத் திட்டமிட்டவர் கல்கியே. அப்போது அவர் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் தலைவராய் இருந்தார். மகாநாட்டுக்கும் அவரே தலைமை வகித்தார்.

முதன் மந்திரி ராஜாஜி நல்லாசி கூறி அந்த மகாநாட்டைத் தொடக்கி வைத்ததை அடுத்து, கல்கி வாசித்த தலைமை உரை, எழுத்தாளர்களின் கடமையையும் பொறுப்பையும் வலியுறுத்தும் நல்லுரையாய் இருந்தது. அந்த ஆண்டின் இறுதியில் கல்கி காலமானதால், அந்த உரையே தமது தோழர்களுக்கு அவர் மொழிந்த இறுதி நன்மதியாக அமைந்தது:

...இன்னும் நம் சமூகத்தில் பல தீமைகள் இருக்கத்தான் இருக்கின்றன. அவற்றைப் போக்கும் நோக்கத்துடன் எழுத்தாற்றலைப் பயன்படுத்துவது எழுத்தாளரின் கடமையும் உரிமையுமாகும். ஆனால், ஒரு சமூகத் தீமையை ஒழிக்க எண்ணும்போது, அதை விடப் பெரியதொரு தீமை விளைவதற்கு இடம் கொடுக்கக் கூடாது, எல்லா எழுத்துக்கும் இலக்கியத்துக்கும் மனித தர்மம் அடிப்படையாய் இருக்க வேண்டும்.

இது மனித குலத்தை ஒன்றுபடுத்துவதற்கு உதவக் கூடியதா, மனித குலத்தில் வேற்றுமையை வளர்க்கக் கூடியதா என்பதே, நல்ல எழுத்துக்கு உரை கல்லாகும். அன்பு, அனுதாபம், நீதி, நேர்மை ஆகிய பண்புகள் அமைந்த அறநெறிக்கு மாறான எழுத்து எதுவும் மனித குலத்துக்குத் தீமையை விளைவிக்கும். மனித குலத்தில் எந்த ஒரு பகுதிக்குத் தீமை விளைந்தாலும் அது மற்றப் பகுதியையும் பாதித்தே தீரும்.

காமக் குரோதங்களையும், மதமாற்சரியங்களையும் கிளப்பி விடக்கூடிய எழுத்து சில சமயம் வெற்றிகரமாய் இருப்பதாகக் காணப்படலாம். ஆனால் அந்த வெற்றி கானல் நீர் போன்றதாகும். மொத்தத்தில் பெருந் தீமையே விளையும். அன்பு, அறம், நீதி, நேர்மை, பரோபகாரம், சீலம் ஆகியவை அடங்கிய தார்மீக நெறிக்கு மாறான எழுத்து நல்ல இலக்கியமாக ஒப்புக் கொள்ளப்பட மாட்டாது ....

தமிழ் எழுத்தாளர்களுக்கு இத்தத் துறையில் இரண்டாயிரம் ஆண்களுக்கு முன்பே திருவள்ளுவர் வழிகாட்டி, பாதையும் அமைத்

---

ஆசிரியர்: ஒன்று முதல் பத்துவரை சொல்லு பார்க்கலாம்.

பையன் : 1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 10.

ஆசிரியர்: வெரி குட்! திருப்பிச் சொல்லு.

பையன் : குட் வெரி!



— ரங்கராஜன்



உலக மகா அதிசயம்!

"என் கதைகளை எந்த ஆசிரியரும் திருப்பி அனுப்பவில்லை. அதனால் நான் எழுத்தாளராகி விட்டேன்."

- வங்காள எழுத்தாளர் ஆஷா பூர்ணாதேவி — ஸ்டேட்ஸ்மன் - பாபு.

---

துக் கொடுத்திருக்கிறார். திருக்குறள் அறத் துப்பாலை நன்கு படித்து நிறுத்திக் கொண்டோமானால், எழுத்தாளர்கள் வழி தவறிச் செல்வதற்கே இடமிராது.

கல்கியின் தலைமை உரையை அடுத்துப் பரிசளிப்பு நிகழ்ச்சி. அதற்குப்பிறகு சங்கத்தின் "பாரதி" சஞ்சிகையின் முதல் இதழை "சுதேசமித்திரன்" ஆசிரியர் ஸி. ஆர். சீனிவாசன் வெளியிட்டார். அதன் ஆசிரியர் சாமிநாத சர்மா. அதன் முதல் ஆறு இதழ்களுக்கு வேண்டிய காகிதத்தைக் கல்கி உதவியிருந்தார்.

சொற்பொழிவுகள், கருத்தரங்குகள், முத்தமிழ்க் கலைநிகழ்ச்சிகள் ஆகியவற்றுடன் இரண்டு நாள் நடந்த அந்த மகாநாடு, சங்கத்தின் மதிப்பை உயர்த்தி அதன் உறுப்பினர்களைப் பெருமிதம் கொள்ளச் செய்தது.

"மகாநாட்டின் வெற்றிக்குப் பெரிதும் பாடுபட்டவர்கள்" என்பதாக ஆறு பேர்களைத் தமது பத்திரிகையில் கல்கி குறிப்பிட்டுப் பாராட்டினார். அவர்களில் முதல்வரான எஸ். பாஷ்யம் வரவேற்புக் குழுத் தலைவர் — அவர்தான் "சாண்டில்யன்"; சரித்திர நாவலாசிரியராக அப்போது புகழ் வீசத் தொடங்கி இருந்தவர். இரண்டாமவர், நா. ராமச்சந்திரன் — இண்டியன் ஃபைன் ஆர்ட்ஸ் சங்கத்தின் துணைச் செயலாளராய் அப்போது பணியாற்றியவர். இப்போதும் அதே சங்கத்தின் செயலாளராய்க் கர்நாடக இசையைத்தொடர்ந்து பேணி வருபவர். அடுத்தவர், "விக்கிரமன்" என்ற புனைபெயர் பூண்ட வேம்பு; "அமுத சுரபி" ஆசிரியர்; ஏற்கனவே அறிந்தபடி கல்கியைக் குருவாகக் கொண்டவர். ஆக்கூர் அனந்தாச்சாரி அடுத்த பெயர்; முன்பே அவரைப் பற்றித் தெரிந்து கொண்டோம். கடைசி இரண்டு பெயர்கள், சங்கத்தின் செயலாளர்களான ப. கோதண்டராமன், புத்தனேரி சுப்பிரமணியம்.

இவர்களிலே புத்தனேரியை அறிமுகப் படுத்த வேண்டிய அவசியமே இல்லை. ஒரு காலத்தில் பொது வாழ்வில் வெகுவாக ஈடுபட்டிருந்த கோதண்டராமன் இப்போது ஒதுக்கமாய்ப் புதுச்சேரி அரவிந்தர் ஆசிரமத்தில் இருந்து வருவதால், அவரைப் பற்றி மட்டும் கொஞ்சம் சொல்ல வேண்டியதாகும்.

அவர் சட்டம் படித்த பட்டதாரி; சிறைசென்ற தேசபக்தர்; இலக்கியத்தில் ஆர்வம் கொண்டவர்; புத்தகப் பித்தர் — தம் வருவாயில் பெரும் பகுதியைப் புத்தகங்கள் வாங்கிச் சேர்ப்பதில் செலவிட்டவர். இருபதுகளில் "சுதேசி" என்ற பத்திரிகையை நடத்தி, கல்கி புகழ் அடைவதற்கு முன்னாலேயே அவருடைய கட்டுரை ஒன்றை அதில் வெளியிட்டவர்.

தமிழ் எழுத்தாளர் சங்கம் கல்கியின் தலைமையில் இயங்கிய சமயத்தில், கோதண்டராமனும், சாண்டில்யனும் சுதேசமித்திரனில் பணி செய்து கொண்டிருந்தார்கள். அவர்களும், "கண்ணன்" ஆசிரியர், "ஆர்வி" என்ற ஆர். வேங்கடராமனுந்தான், சங்கத் தலைமையைக் கல்கி ஏற்பதற்குக் காரணமாய் இருந்தவர்கள்.

ஏற்கனவே அமைந்திருந்த தமிழ் எழுத்தாளர் சங்கம் ஒன்று, 1950-ல் ஓய்ந்து நின்ற சமயத்தில் அம்மூவரும் கல்கியை அணுகி வற்புறுத்தி, சங்கத் தலைமைக்கு அவர் இணங்கும்படி செய்தார்கள். அந்த ஆண்டின் இறுதியில் நடந்த கூட்டம் ஒன்றில் அப்பதவிக்கு அவர் தேர்ந்தெடுக்கப்பட்டார். கோதண்டராமனும் ஆர்வியும் செயலாளர்கள்.

சங்கத்தைச் சீராக நடத்த விரும்பிய கல்கி, அதற்கு அமைப்பு விதிகள் வரையச் சொல்லி முறைப்படி அதைப் பதிவு செய்தார். பதிவுக்குப் பிறகும் அவருடைய தலைமை தொடர்ந்தது.

1952-ம் ஆண்டுக்கான தேர்தலில், கோதண்டராமனும் மற்றவர்களும் எவ்வளவோ வற்புறுத்தியும், தலைமைப் பதவிக்குக் கல்கி விண்ணப்பம் அனுப்ப மறுத்து விட்டார். அதன் பேரில் கி. சந்திரசேகரன் விண்ணப்பம் தாக்கல் செய்ய, அவரே தலைவராய்த் தேர்ந்தெடுக்கப்பட்டார். முதலாவது மகாநாடு அவருடைய தலைமையில் நடைபெற்றது. அதற்குச் சில மாதங்களுக்குப் பிறகு அவர் ராஜினாமாக் கொடுத்து விலகிக் கொண்டார். அதனால் ஏற்பட்ட முடக்க நிலையைத் தீர்ப்பதற்காக, கோதண்டராமனும் சாண்டில்யனும்

# எக்காரணத்திற்கும் பொருத்தமானவை
# பிலிப்ஸ் லூமினேர்கள்





ஒவ்வொரு பிலிப்ஸ் லூமினேரும்
எண்ணற்ற பல கருத்துக்களை
மனதில் கொண்டு உருவாக்கப்பட்ட
தாகும். அழகான தோற்றம் முக்கியம்தான்
என்றாலும் அது சிக்கனம், ஒளித்திறன்,
தரம் இவற்றுக்கடுத்தபடிதான்.
மிகச் சிறந்த மூலப் பொருட்கள்
தேர்ந்தெடுக்கப்படுவதுடன், தயாரிப்பு
முறையும் கடும் பரிசோதனைக்குள்ளாக்கப்
படுகிறது. ஒவ்வொரு தொகுப்பிலிருந்தும் ஒரு
ஸாம்பிள் எடுத்துத் தீவிரமாக செயல்படு
நிலையில் பரிசோதிக்கப்படுகிறது.
ஒவ்வொரு ஒளி அமைப்பிற்கும் ஏற்ற ஒரு
பிலிப்ஸ் லூமினேர் கிடைக்கிறது. சீரான
ஒளியினைப் பெற சிறந்த சாதனப்பிணைப்பு.













## பிலிப்ஸ்—லாம்ப் மற்றும் ஒளித்துறையில் முன்னோடிகள்




# பிலிப்ஸ்

பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்

PHL 9366

# விலை இறக்கம்

ஸூப்பர் **ரின்** ~~ரூ.1-60~~

# இப்போது ரூ.1-45 தான்

(வரிகள் தனி)




**மின்னலடிக்கும் ஸூப்பர் ரின் வெண்மை... மேன் மேலும் அதி வெண்மை.**

ஹிந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

லின்டாஸ்-RIN. 20-140 TM

மறுபடியும் கல்கியை அணுகி அவரைத் தலைமை ஏற்கச் செய்தார்கள்.

விருப்பமின்றியே கல்கி பதவி ஏற்ற போதிலும், ஏற்ற பிறகு சங்கத்தின் மேம்பாட்டுக்காகவும் எழுத்தாளர் நலனுக்காகவும், செயலாளரின் துணையுடன் வெகுவாக உழைத்தார். அந்த உழைப்பை, 1957-ல் வெளியான ''பாரதி'' சஞ்சிகையின் ஐந்தாவது மகாநாட்டு இதழ் நினைவுகூர்ந்துள்ளது:

திரு கல்கி அவர்களும் திரு ப. கோதண்டராமன் அவர்களும் சங்கத்தை உருவாக்குவதற்கு மிகுந்த சிரமமும் சிரத்தையும் மேற்கொண்டனர். அவர்களுடைய இடைவிடா முயற்சி இல்லையெனில் எழுத்தாளர் சங்கம் இன்றையச் சீரிய நிலையில் இருக்குமோ என்பது சந்தேகமே. அன்போடு இன்சொல் பேசி எவரையும் தழுவிக் காரியங்களை நிறைவேற்ற வல்லவரான திரு கல்கி யவர்களின் தலைமையும், மேற்கொண்ட செயலை எப்பாடு பட்டேனும் நிறைவேற்றுவதிலே கண்ணும் கருத்தும் கொண்டு, தன்னலத்தை அறவே துறந்து ஓயாமல் உழைக்கும் இயல்பினராகிய திரு ப. கோதண்டராமன் அவர்கள் ஐந்தாண்டுகளாகத் தொடர்ந்து செயலாளராக இருந்தமையுமே, தமிழ் எழுத்தாளர் சங்கம் மேன்மேலும் வளர்ந்தோங்கக் காரணமாயின.

சங்கத் தலைமையின் செல்வாக்கைப் பொதுவாக எழுத்தாளர் இனத்தின் நலனுக்காக மட்டுமின்றி, சில தனி எழுத்தாளர்களின் உதவிக்காகவும் கல்கி பயன்படுத்தினர். பரலி சு. நெல்லையப்பருக்கு மத்திய அரசின் உபகாரச் சம்பளம் (மாதம் ரூ. 100) கிடைக்கும்படி செய்தது இவ்வகையில்ஒன்று. சங்கத்தின் சார்பில் ''குமுதம்'' ஆசிரியர் எஸ்.ஏ.பி. அண்ணாமலை நெல்லையப்பருக்கு நிதி திரட்டிக் கொடுத்த போது, அந்த முயற்சிக்கும் கல்கி ஆதரவு அளித்தார்.

தேசிகவிநாயகம் பிள்ளையின் ''நல்ல சகுனம் நோக்கிச் செல்லடி'' என்ற பாடலை ''மலைக்கள்ளன்'' என்ற திரைப் படத்தில் அனுமதியின்றிப் பதிவு செய்திருந்தார்கள். அதைச் சங்கத்தின் இணைச் செயலாளர் புத்தனேரி சுப்பிரமணியம் கல்கியின் கவனத்துக்குக் கொண்டு வரவே, கவிஞரின் உரிமைக்காக அவர் நடவடிக்கை எடுக்கத் தீர்மானித்தார். அது விஷயமாய் கவிஞருடனும் படாதிபதியுடனும் கடிதப்போக்குவரத்து நடத்திச் சட்டப்படி ஆவன செய்யும் பொறுப்பைப் புத்தனேரியிடம் ஒப்படைத்தார். அதன் பலனாகஅப்படத்தின் முதலாளி, கல்கியிடம் ராஜி பேசிக் கவிஞருக்கு ஆயிரம் ரூபாய் நஷ்ட ஈடு



பெங்களூர் என்று எழுதப்பட்ட அட்டையை ஏந்தியபடி நெடுஞ்சாலை ஓரத்தில் நின்று கொண்டிருந்தார் ஒருவர். அந்த வழியாக வரும் கார்களை 'லிப்டு'க்காக நிறுத்தவே இந்த முயற்சி. ஒரு கார் அவர் அருகே வந்து நின்றது. ஓட்டி வந்தவர், ''நீங்கள் தவறான இடத்தில் நிற்கிறீர்கள்; எதிர்ச் சாரியில் போய் நில்லுங்கள்'' என்றார்.

லிப்டு கேட்டவர் கதவைத் திறந்து ஏறி உட்கார்ந்தார். ''நான் சென்னைக்குத்தான் போகவேண்டும். சென்னை என்று எழுதி வைத்திருந்தால் நீங்கள் ஏன் நிறுத்தியிருக்கப் போகிறீர்கள்?'' என்றார்.

-- ஆர். எம்.

✕✕✕✕✕✕✕:✕✕✕✕✕✕:✕✕✕✕✕✕✕✕✕

கொடுத்தார். கவிஞர் மரணப் படுக்கையில் இருந்த சமயம் அது.

புதுமைப் பித்தன் குடும்பத்துக்குக் கல்கி செய்த உதவியை ஏற்கனவே அறிந்து கொண்டோம். அதுவும் சங்கத் தலைவராய் அவர் இருந்தபோது நிகழ்ந்ததே.

இத்தனை ஈடுபாடுகளுடன், தென்னிந்தியப் பத்திரிகையாளர் சம்மேளனத்தை அமைப்பதிலும் நடத்துவதிலும் கல்கி பங்கு கொண்டார். நெடுங்காலம் அதற்குத் தலைமை வகித்தவரான என். ரகுநாத அய்யர் ('ஹிந்து' பிரதமத் துணையாசிரியராய் இருந்தவர்) கல்கியின் உழைப்பையும் ஒத்துழைப்பையும் வெகுவாகப் பாராட்டிச் சொல்கிறார். சம்மேளனக் கட்டடத்துக்காக நிதி திரட்டிய போது, கல்கியும் சதாசிவமும் அம்முயற்சியில் ஈடுபட்டுக் கணிசமாய்ப் பணம் சேர்த்துக் கொடுத்ததை மிகச் சிறப்பாய் அவர் குறிப்பிடுகிறார்.

பத்திரிகைத் தொழிலைப் பெருமை மிக்கதாய்க் கல்கி கருதினர். ''அரசியலில் இவ்வளவு அக்கறை கொண்ட நீங்கள் நேராக அதில் ஈடுபட்டால் அமைச்சர் பதவி வகிக்கலாமே?'' என்று நண்பர் ஒருவர் அவரைக் கேட்டாராம். அதற்குக் கல்கி, ''பத்திரிகாசிரியர் பதவியைவிட அமைச்சர் பதவி மேலானதா என்ன?'' என்று பதிலுக்குக் கேட்டாராம்.

பத்திரிகையாளர்களை — ஜர்னலிஸ்டுகளை — ''பேனா வீரர்கள்'' என்று ஒரு சமயம் கல்கி குறிப்பிட்டு எழுதினர்; இன்னொரு சமயம் பத்திரிகை ஆசிரியர்களைப் ''பேனா மன்னர்கள்'' என்றே வர்ணித்து மகுடம் சூட்டினர்.

(தொடரும்)

இன்றைய கதை

தமயந்தி

டக்டக்கென்று கதவை யாரோ தட்டினார்கள். மனசைத் தொடும் அன்பும், இதமான பேச்சும் இல்லாவிட்டாலும் இது போன்ற 'மேனர்' ஸாக்கெல்லாம் இந்த வீட்டில் குறைச்சல் இல்லை!

"யெஸ் — கம் இன்!"

உள்ளே வந்தது அம்மாதான்.

'ஸாரி—மிஸஸ் கன்யா நாகரத்தினம்.'

"என்ன முரளி, நான் வெளியே போய் விட்டு வரட்டுமா? நாலரை மணிக்கு ஒரு 'ஃபங்ஷன்' இருக்கிறது. வோட் அஃப் தாங்ஸ் சொல்லணும். அப்படியே மிஸஸ் கலா வேதாசலத்தோட நீஸ் மாரேஜ் ரிஸப்ஷன் —" என்று சொல்லிக்கொண்டே போனாள்.

சாதாரணமாக இது போல் சொல்லிக் கொள்ள மாட்டாளே! ஏன் இந்த அதிசயம்?

அடுத்த விநாடியே காரணம் தெரிந்தது.

"விஜயா வந்தவுடனே ஃப்ரிஜ்ஜிலிருந்து கூல்டிரிங்க் எடுத்துக்க விடாதே. அவளுக்கு ஒரே இருமல்!"

'ஓகோ! இதற்குத்தானா இவ்வளவு பீடிகை?' என்று எண்ணிக் கொண்டான் முரளி. "சரி, அம்மா!" என்றான் பவ்யமாக.

கார் விர்ரென்று கிளம்பும் ஓசை தெளிவாகக் கேட்டது. மாடியிலிருந்து கலகல வென்ற சிரிப்பும், கிளுகிளுப்பான பேச்சும் கேட்டன. வனிதாவின் சிநேகிதிகள். த்ரீ பெட்ரூம் ஃப்ளாட், இரண்டு கார், ஒரு பெரிய பிஸினஸ்மேனுடைய பிள்ளை — இருந்தும் என்ன?

முரளிக்கு நிம்மதி கிடையாது. அமைதி கிடையாது. அவைகளைத் தருவது, இதோ ரகசியமாக ஒளித்து வைத்திருக்கும் போதை மருந்துகள்தாம்.

முரளி ஒருவித ஆசையுடனும், பாசத்துடனும் அவற்றைப் பார்த்தான்.

முரளிக்கு அந்தப் பழக்கம் ஏற்பட்டதே தற்செயலாகத்தான்.

அடையாறும் அதையொட்டின பெசன்ட் நகரும், மகாலட்சுமி கோயிலினால், கூட்டமாக நிரம்பி வழிந்த சமயம், தன்னிச்சையாகக் கடற்கரை ஓரமாகச் சென்றவன், வாசுவைப் பார்த்தான். வாசு அவனுக்குச் சீனியர் (படிப்பு, பெயில் ஆனது — எல்லாவற்றிலுமே!)

" ஹாய், முரளி!"

"என்னடா நீயா ?"

"ஆமாம். எங்கே இவ்வளவு தூரம் ?"

"மகாலட்சுமி கோயிலைப் பார்க்க வந்தேன். ரொம்பக் கூட்டம். போக முடியவில்லை."

"லோ, யூ ஆர் அன்ஹாப்பி!" என்றான் வாசு, "என் கூட வா. சரி, பண்ணிவிடுகிறேன்!"

"எப்படிடா ?" முரளியின் கண்கள் ஆச்சரியத்தால் விரிந்தன.

''பேசாமல் வாடா !'' முரளியை வற்புறுத்தி அழைத்துப் போனான். எந்த இடம் என்று சரியாகத் தெரியவில்லே. 'திருவான்மியூர் ஊராட்சி எல்லே ஆரம்பம்' என்று ஒரு போர்டு போடப்பட்டிருந்த இடத்தில் திரும்பினான். ஒரு மாடி வீடு. நிறைய பேர் இருந்தார்கள். எல்லாரும் அவன் வயதினர்கள். சுருட்டு மாதிரி எதையோ உறிஞ்சிக் கொண்டு, ஆடிக் கொண்டும் பாடிக் கொண்டும் இருந்தார்கள்.

''இதோ ஒரு புதிய நண்பர் !''

''ஆ, வெல்கம்டு யூ !''

சட்டென்று யாரோ கையைப் பிடிப்பது போலிருந்தது. வாயைப் பலவந்தப்படுத்தித் திறந்தார்கள். எதையோ (புகையிலே மாதிரி இருந்தது) வாயில் போட்டார்கள். கொஞ்சம் நாழிகைக்கெல்லாம் மனம் இலேசானதுபோல் உணர்ந்தான் முரளி. மேலே அந்தரத்தில் மிதப்பது மாதிரி இருந்தது. அதற்கப்புறம் என்ன ஆயிற்று என்று அவனுக்கே தெரியாது. எப்படி வீட்டுக்கு வந்தோம், யார் டாக்ஸியில் கொண்டு வந்து சேர்த்தார்கள் என்பது ஒன்றும் அவனுக்குத் தெரியாது.

ஆனால் முதல் தடவைதான் அப்படி. அப்புறம் பழக்கமாகிவிட்டது. தானே அங்கு சென்று பழகிக் கலந்து கொண்டு, இப்போது வீட்டுக்குள்ளேயே உண்டு அனுபவித்துப் போதையில் அமிழும் அளவுக்கு அவன் அதற்கு அடிமையாகிவிட்டான். ஹீராயின்...

ஹாஷிஷ்....

எம். ஏ.யாவது மண்ணாங்கட்டியாவது ! நான்சென்ஸ் !

அன்று என்னவோ ஒரு காரணத்துக்காக விடுமுறை தினம்.

நாகரத்தினம் 'போர்ட் மீட்டிங்கு'க்குப் போய்விட்டார். அம்மாவையும் காணோம். முரளி ஓர் இரண்டுங்கெட்டான் உலகத்தில் இருந்தான்.

வாசலில் அழைப்பு மணி ஒலித்தது.

முரளி எழுந்து போய்க் கதவைத் திறந்தான். இலேசாகக் கால்கள் தள்ளாடினாலும் சமாளித்துக் கொண்டான்.

பெண் ஒருத்தி நின்று கொண்டிருந்தாள்.

''மிஸஸ் சுகன்யா நாகரத்தினம் இல்லேயா?''

''இல்லே! அப்புறம் ?''





**மூச்சு பற்றிய பேச்சு !**

**லண்டன் ட்ரபால்கர் சதுக்கத்தில் வேலை செய்யும் வேலையாட்கள் ஒரு நாளைக்கு 100 சிகரெட்டு குடிக்கும் அளவுக்கு அவர் சுவாசிக்கும் காற்றில் விஷவாயு இருக்கிறது.** — ஜே. எஸ். — பாலி-

''கோபமாக இருக்கிறீர்கள் போலிருக்கிறது!'' என்று அந்தப் பெண் சிரித்தாள்.

''நான் மட்டும்தான் இருக்கிறேன்...'' இதைச் சொல்வதற்குள்ளேயே முரளிக்குக் கண்ணைச் சுழற்றியது. வலுக் கட்டாயமாக ஒரு புன்னகையை வரவழைத்து, ''நீங்கள் யார்? என்ன விஷயம்? என்னிடம் சொல்லக் கூடாதா?'' என்றான்.

''ஒன்றுமில்லை, மாதவி பணிக்கர் தலைமையில் ஒரு 'செமினார்' ஏற்பாடு செய்திருக்கோம். சாரதா சத்யம்தான் சீஃப் கெஸ்ட், உங்கள் அம்மாவிடமும் சொல்லுங்கள்'' என்று கூறி ஓர் அழைப்பிதழைத் தந்தாள்.

புன்னகை செய்தான் முரளி. இன்விடேஷனைப் பிரித்துப் படித்தான். கருத்தரங்கின் பொருள் 'மாணவர்களிடையே அமைதியின்மை' — காரணங்கள் என்ற வரிசையின் கீழ் நாலைந்து குறிக்கப்பட்டிருந்தன. அவைகளில் ஒன்று 'போதை மருந்து'.

முரளிக்குத் தூக்கிவாரிப் போட்டது. ''மிஸ்....'' என்று கூப்பிட்டுக் கொண்டே ஓடினான். அதற்குள் நளினி போய்விட்டிருந்தாள்.

கட்டிலில் ஆயாசமாக விழுந்தான் முரளி. அவள் யார்? தன்னைப் பற்றித் தெரிந்து கொண்டுதான், வேண்டுமென்றே தந்தாளோ? அந்தக் கவர்ச்சியான முகம் திரும்பத் திரும்ப அவன் மனக் கண்ணின் முன் தோன்றிக் கொண்டே இருந்தது.

டெலிபோன் ஒலித்தது.

முரளி எடுத்தான். ''ஹலோ !''

''நான்தாண்டா வாசு ! சீக்கிரம் வாடா. நிறைய ஃப்ரெண்ட்ஸ் வெயிட் பண்ணுகிறார்கள்.''

''நான் வரலே!''

''ஏன்?''

''என்னவோ போயேன். ம்... அது சரி.... இப்ப ஒரு செமினாருக்கு வீட்டில் 'இன்விடேஷன் வந்தது'' என்று தொடங்கி முழு விவரங்களையும் சொன்னான். ''நீயும் வாயேன். கலாட்டா பண்ணலாம்.''

''ஓ. கே! வரேன்.''

அந்தக் கருத்தரங்குக்கு முரளி சென்றான். கடைசி வரிசையில் உட்கார்ந்து கேட்டுக் கொண்டிருந்தான். என்னென்னமோ பேசினார்கள். இலேசான போதையில் கிடந்த முரளிக்கு எதுவும் காதில் ஏறவில்லை. நளினி கூடப் பேசினாள். அவளைப் பற்றி மட்டும் விசாரித்துத் தெரிந்து கொண்டான். சைக்காலஜி மாணவியாம்; சமூக சேவகியாம்.

இவ்வளவுக்கும் மறுப்பு தெரிவிப்பது மாதிரி ஏதாவது சொல்ல வேண்டும் போல் இருந்தது. மெல்ல வாசுவை உசுப்பினான்.

வாசு திடுமென்று மேடையில் ஏறிக் கண்டபடி பேச ஆரம்பித்தான். மற்றவர்கள் மறுப்பையும் மீறி, மனம் போன போக்கில் உளறலானான். சட்டென வயதான ஒருத்தர் வாசுவைப் பலவந்தமாக விலக்கினார்; பிறகு சொன்னார்: ''இந்த மாணவன் இது போல் உளறியதற்குக் காரணம் என்னவென்று உங்களுக்குத் தெரிந்திருக்கலாம். இப்படிப் பத்து செமினார் நடத்துவதற்குப் பதில் ஒரு வாலிபனைத் திருத்த முடிந்தால் அது எவ்வளவோ நல்லது !''

கூட்டத்தில் பலத்த கை தட்டல் !

அன்றைய தினத்திலிருந்து ஆச்சரியப்படத் தகுந்த விதத்தில், நளினியைப் பார்க்கும் சந்தர்ப்பங்கள் முரளிக்கு அதிகமாகிக் கொண்டே போயின. வனிதாவின் கல்லூரித் தோழி என்ற முறையில், எலியட்ஸ் பீச்சில், கைத்தறிப் பொருட்காட்சியில், நளினியைப் பார்க்கும்போதெல்லாம் முரளிக்கு ஓர் உறுத்தல் ஏற்பட்டது. அவள் பார்வையைத் தவிர்க்க முயன்றான்; ஆனாலும் அது தேவையாயும் இருந்தது!

முரளிக்கு மார்ச் மாத பரீட்சை நெருங்கிக் கொண்டே வந்தது. சாதாரணமாக வருடா வருடம், விருப்பமில்லா விட்டாலும், 'சடங்கு மாதிரி படித்துவிடுவான். இப்போது அதுவும் முடியவில்லை. இரண்டுவிதமான போதைகள்!

திடீரென்று ஹாலிலிருந்து பரபரப்பான சத்தமும், பேச்சுக் குரலும் கேட்டன.

''இங்கேதானே வைத்தேன் !'' — சிவகுமாரின் குரல்.

''தேடிப் பாரேன். உனக்கு எப்போதுமே அவசரம் ஜாஸ்தி !'' — இது வனிதாவின் புத்திமதி.

''அப்புறம் தேடிக் கொள்ளலாமே ! இப்போது கிளம்பேண்டா !''

''அப்புறமாவது ! நூறு ரூபாய்ப்பா. இங்கேதான் பர்சோடு வைத்தேன்..... நோட்டை மட்டும் காணோம் !''

'பூ. இவ்வளவுதானா விஷயம்?' என்று முரளி நினைத்துக் கொண்டான். சிவகுமாருக்கு எப்போதுமே பரபரப்பும், அவசரமும் அதிகம். ஸ்கூட்டரிலேயே சாவியை வைத்து விட்டு வீடு முழுவதும் தேடுவான்.

நோட்டைப் பிரித்துப் படிக்கலானான். மனம் அதில் பதியவில்லை. கண் முன் வண்ண வண்ணமான சித்திரங்கள் தெரிந்தன. அவற்றின் நடுவே நளினியின் முகம் பளிச்சிட்டது. அவளைப் பற்றி எண்ணும்போதே மனம் சிலிர்க்கிறதே !

சட்டென்று புத்தகத்திலிருந்து என்னவோ விழுந்தது. ஏதோ நோட்டுப் புத்தகத்தின் கிழிந்த தாளாக்கும் என்று பார்த்தான். முரளிக்குத் தூக்கிவாரிப் போட்டது.

நூறு ரூபாய் நோட்டு !

அவன் மனம் பதைத்தது. தன்னிடம் 'பாக்கெட் மணி' என்று அப்பா தருவது கொஞ்சம்தான். போதையில் மூழ்க வசதி செய்து தருபவன் வாசு. ஒரு வேளை... ஒரு வேளை? இதைத்தான் சிவகுமார் தேடுகிறானோ?

# கிளர்ச்சியூட்டும் காட்டனை அளிப்பதோ சென்சுரி

**சூட்டிங்குகள்**—கற்பனை வளம் நிறைந்த டிசைன்களும் சென்சுரி பருத்தியின் குளுமையான சுகமும் பரிபூரணமாக இணைந்தவை

**ஷர்ட்டிங்குகள்**-திகைக்க வைக்கும் கோடுகள் மனதை மயக்கும் கட்டங்கள். எண்ணற்ற திறுசுகள்-இவை எல்லாமே சேர்ந்து, சென்சுரி பருத்தி எண்ணிலா வண்ணங்களில் குன்றாத ஒளி பெற்றுத் திகழ்கின்றது.

**புடவைகள்** பருத்தியின் சுகபோக இதம்-ஆம் உங்களுக்கு சென்சுரி மட்டுமே இந்த சுகத்தை அளிக்க முடியும். சென்சுரி புடவை உங்கள் எழில் உடலை ஒட்டித் தழுவ, கிளுகிளுப்பூட்டும் மகிழ்ச்சியிலே திளைக்கிறீர்கள். நெருப்பை எதிர்த்து உழைக்கும் அக்னியவிரோதக புடவைகளும் உண்டு.

**ஆடை அணி வகைகள்** ஜீவன் ததும்பும் டிசைன்கள். கனிகடம் புரியும் வண்ணங்கள். சென்சுரி பருத்தியின் மென்மையும் உணர்ச்சியைத் தொடும் சிறப்பும் உங்களை என்றும் மகிழ்விக்கும்.

**தி சென்ச்சுரி ஸ்பின்னிங் &**
**மான்யுபாக்சரிங் கோ. லிட்.,**
பம்பாய் **400 025**



சென்சுரி
நூற்றுக்குநூறு
பருத்தித்
துணிமணிகள்.

national-913-Tamil



# இந்த
# விளம்பரத்தைப் பார்த்து
# விட்டு, நீங்கள் எதுவும்
# வாங்கவேண்டியதில்லை

தினமும் பத்திரிகைகளில் நிறைய விளம்பரங்கள் வெளியாகின்றன. ஒவ்வொன்றும் ஏதாவது ஒரு பொருளை வாங்கும்படிக் கூறும் விளம்பரம்தான். ஆனால் இந்த விளம்பரம் அப்படிப்பட்டதல்ல. மாறாக, மாதந்தோறும் நீங்கள் சேமிக்க இது வழி காட்டுகிறது. சிறுகச் சிறுக, நீங்கள் பெருந்தொகை சேமிக்கலாம். இந்தியன் பாங்கில் ரெகரிங் டெபாஸிட் கணக்கு ஒன்று துவக்குங்கள். மாதந்தோறும் ரூ. 100 சேமியுங்கள். 72 மாதங்களில் அது ரூ. 9,900- ஆக அதிகரிக்கும். 100 × 72 = 9900! மாதம் ரூ. 100 அல்லது அதற்குக் குறைவாகவும் சேமிக்கலாம். 72 மாதங்களோ, அதற்குக் குறைவாகவோ, 36 மாதங்கள் வரை கூட சேமிக்கலாம். உங்கள் சேமிப்பு உங்களது வளமான வாழ்வுக்கு வழி வகுக்கும்.

இந்தியாவெங்கிலுமுள்ள எமது 586 கிளைகளுள் ஏதாவது ஒன்றுக்கு விஜயம் செய்யுங்கள். உங்கள் பெயரில் பணம் சேர்வது, உங்களுக்குத் தன்னம்பிக்கையை ஊட்டும்.




**இந்தியன் பாங்க்**

(இந்திய அரசுக்கு முற்றிலும்
உடைமையானது)
தலைமை அலுவலகம்:
17, வடக்கு கடற்கரைச் சாலை,
சென்னை 600 001

ஆகஸ்ட் 15, 1907 முதல் நாட்டுக்குப்
பணியாற்றும் பாங்க்

FDS IB 2351 A TAM

முரளிக்குத் திடீரென்று வேறுவிதமான பயம் பிடித்துக் கொண்டது. தூக்கத்தில் நடக்கும் வியாதி மாதிரி ஏதாவது தோற்றி யிருக்கிறதோ ? போதை மருந்தை அருந்துவ தால், தன் உணர்வேயில்லாமல் சில காரியங் களைச் செய்து விடுகிறேனா? அப்படித்தான் இந்தப் பணம் தன்னிடம் வந்ததோ ?

இந்த வீடு, இந்தச் சூழ்நிலை, இந்தப் போலியான வாழ்வு — இவைகளை விட்டு எங்காவது ஓடிப் போய்விடலாம் போல் இருந்தது, முரளிக்கு.

கடைசி நாள் பரீட்சை முடிந்தவுடன் முரளிக்கு ஒரே உற்சாகம். இனி இஷ்டப்படி திரியலாம் என்ற விடுதலை உணர்வு ஏற்பட் டது. வாசு வரச் சொல்லியிருக்கிறான். ஏதோ ஊசி போட்டுக் கொண்டால் ஆகாயத் தில் மிதப்பது போல் இருக்குமாம்.... சீக் கிரமே போக வேண்டும்.

வீட்டை அடைந்தபோது ஒரே களேபர மாக இருந்தது.

வனிதாவின் புதிய லேடீஸ் வாட்சைக் காணுமாம் !

''என்ன இது ! வர வர ரொம்ப ஜாஸ்தி யாகிவிட்டது. அன்னிக்கு ஒரு நாள் பணம். அப்புறம் கீ செயின், இப்போ என் கடிகாரம்!''

''வீட்டுக்குள்ளேயே திருடன் இருக் கிறானே !''

''ஸம் திங் சீரியஸ். ஐ ஸே !''

முரளி, இவ்வளவும் வேறு எங்கோ நடந்து கொண்டிருக்கிறது என்ற நினைப்பில் தன் அறைக்கு மௌனமாகச் சென்றான். உடையை மாற்றிக் கொண்டான். கிளம்பலானான். வாசுவுடன் புது அனுபவம் காத்திருக்கிறதே!

''இரு முரளி. உன் அறையையும் செக் பண்ணி விடலாம்'' என்று வனிதா அவனைத் தடுத்தாள்.

முரளி பிரமித்து நின்றான். ''என்ன உளர்றே, வனிதா ?''

''இல்லை. எல்லா இடத்திலும் பார்த்தாகி விட்டது. காணோம். உன் அறையிலும் தேடிப் பார்த்துவிடலாமே !'' என்றாள் வனிதா அமைதியாக.

முரளி, அவள் சோதனை போடுவதைக் கவ னித்துக் கொண்டே யிருந்தான்.

சடக்கென்று அலமாரியைத் திறந்தாள். ஒளித்து வைக்கப்பட்டிருந்த மருந்துகள். பக் கத்திலேயே கீ செயின், கடிகாரம்!

''அப்பா ! அண்ணா ! இங்கே வாருங்க ளேன் !''

''என்னது? என்ன?''

''எல்லாம் இருக்கு. முரளி அறையிலே!''

தடதடவென்று எல்லாரும் உள்ளே நுழைந் தார்கள். அப்பா, அம்மா, சிவகுமார்...

குற்றவாளி போல் நின்றான் முரளி. எல்லார் பார்வையும் தன் மீது நிலைத்திருப் பதை அவனால் உணர முடிந்தது. கூரிய விழிகள், குற்றம் சாட்டும் பார்வைகள்....

''நான் திருடலை! நான் திருடலை!'' என்று வெறி பிடித்தவன்போல் கத்தினான். மறு கணமே மயக்கமுற்றுக் கீழே சாய்ந்தான்.

**வி**ழிப்புக் கொடுத்தபோது —

இந்தப் பக்கம் சிவகுமாரும், அம்மாவும். அந்தப் பக்கம் அப்பாவும், வனிதாவும். வேறு யார் புதிதாக ? ஆ... நளினி !

முரளிக்கு வெட்கம் பிடுங்கித் தின்றது. ஏனோ அழுகை பிதுங்கிக் கொண்டு வந்தது. ''நான் எடுக்கலே ! எடுக்கவே இல்லை!''

''நீ எடுத்ததா யார் சொன்னா முரளி?'' என்றாள் வனிதா. ''நீ சுய நினைவோடு இருக் கும் போது ஒரு தப்பும் செய்யமாட்டியே ! எங்களுக்குத் தெரியாதா ?''

''மாட்டேன்! இனி அந்தச் சனியனைத் தொடவே மாட்டேன். சீ ! திருடக்கூட வைத்திருக்கிறது அது! கண்மூடி !''

''ஒரு வகையில் எல்லாருக்குமே பொறுப்பு உண்டு முரளி. உன்னை நீயே வதைத்துக் கொள்ளாதே! உன்னோட மனசை அறியாமல் இருந்துவிட்டோம். நளினி சொன்ன பிறகு தானே தெரிந்தது. இனிமேல் குழந்தை களைக் கவனிப்பதுதான் என் முதல் காரியம், கடைசிக் காரியம் எல்லாம்!''

பேசுவது அம்மாதான். மிஸஸ் நாகரத் தினம் இல்லை! முரளியின் மனம் பரவசத்தில் ஆழ்ந்தது. இதயம் நிறைவு அடைந்தது. மெல்ல மெல்ல அவன் கண்கள் அயர்ந்தன. அதற்கு முன்பாக நளினியை ஒரு முறை பார்த்தான். பிறகு கனவுலகில் அமிழ்ந்தான்.

“**ந**ளினி, நீ என்ன நினைக்கிறே ?'' என்றாள் வனிதா.

''வாசுவுடன் அவரைப் பார்த்ததுமே எனக்குச் சந்தேகமாய் இருந்தது வனிதா. வாசு ஓர் 'அடிக்ட்'. முரளியை எப்படியாவது திருத்தியாக வேண்டும் என்று தோன்றியது. உன்னுடன் பேசியதில் இந்த வீட்டு நிலவர மும் தெரிந்தது. அதிலும் மாற்றம் அவசியம் என்பதால் உன்னோடு சேர்ந்து ஒரு நாடக மாடி அவருக்குத் திருட்டுப் பட்டமும் கட்டி னேன். அவர் ரொம்ப 'ஸென்ஸிடிவ்'. அதனால் நாம் எதிர்பார்த்த பலன் கிடைத் தது. உன் தாயார் விஷயத்திலும் இந்த அதிர்ச்சி வைத்தியம் நல்ல பலன் அளித்திருக் கிறது. ஆனால் ஒன்று...''

''என்ன?'' என்றாள் வனிதா.

''உன் தலையே போனாலும் நீ நாடக மாடின விஷயத்தை உன் பெற்றோரிடமோ முரளியிடமோ சொல்லி விடாதே ! வேதா ளம் மறுபடியும் முருங்கை மரம் ஏறிவிடும் ! முரளி மறுபடியும் போதை மருந்துகளை நாடு வான். உன் அம்மாவும் மறுபடியும் லேடீஸ் கிளப் அது இது என்று புறப்பட்டு விடுவாள்.''

''என் வாயை மூடக் கூலி?''

''என்னை பிளாக்மெயில் செய்கிறாயா? இது டிரக் அடிக்ஷனைவிட மோசமானது !''

''பிளாக்மெயிலா? என்ன உளறுகிறாய் ? நான் நாத்தனார் தட்சிணையைப் பற்றியல் லவா கேட்கிறேன் ! இருக்கமாக மூணாவது முடிச்சு விழணுமா வேண்டாமா?''

''தட்சிணையை இப்போதே தருகிறேன், வாங்கிக் கொள்'' என்று கூறி நளினி வனிதா வின் கன்னத்தைக் கிள்ளினாள்.

---

**டோக்கியோ தெருக்களில் மூலைகளில் பிராணவாயு குழாய் வைத் திருப்பார்கள். மூச்சு திணறினால் அதில் போய்க் கொஞ்சம் பிராண வாயு இழுத்துக் கொள்ளலாம். அங்கு சுகாதாரம் அவ்வளவு கெட்டு விட்டது.**

**ஜே. எஸ்.**



ஆடையில்
பெண்மையின்
இழையோடும் போது
பெண்மைப் பேரழகு
புன்னகை புரியும்!

நிச்சயமாக, மஃப்தலால் க்ரூப்
அளிப்பவை நேர்த்தியான
துணிமணிகள்தான் !




TM

[ஹோட்டல் தின்பண்டங்களின் விலையை நிர்ணயித்ததோடு நம் அரசினர் எடையையும் நிர்ணயித்து விட்டதால், இனி காப்பி ஹோட்டல்களில் இப்படி நடந்தால் ஆச்சரியப்படுவதற்கில்லை.]

சர்வர்: என்ன ஸார், வேண்டும்?

பொதுஜனம்: இரண்டு இட்டிலி, சாம்பார்.

சர்வர்: இட்டிலி 5 கிராம் ஒரு நயாசைபா, சம்மதம்தானா!

பொதுஜனம்: 5 கிராம் ஒரு நயாபைசாவா? இரண்டு இட்லி சேர்ந்து 100 கிராம் இருக்க வேண்டும், அதற்கு 20 பைசா விலை என்று தானே அரசினர் விலை விதித்துள்ளார்கள்?

சர்வர்: அதைத்தான் நான் 5 கிராம் ஒரு நயா பைசா என்று குறிப்பிட்டேன்.

பொதுஜனம்: அப்படி அதைத் தனியாகக் குறிப்பிடுவானேன்?

சர்வர்: ஏனெனில் எங்கள் சமையற்காரருக்கு ஒரே சீராக இட்லி வார்க்கத் தெரியவில்லை. ஒரு சுடு 105 கிராம் இருந்தால் இன்னொரு சுடு 110 கிராம் இருக்கிறது. ஆகவே இரண்டு இட்லி சேர்ந்து 105 கிராம் இருந்தால் விலை 21 பைசா. 110 கிராம் இருந்தால் 22 பைசா.

பொதுஜனம்: 95 கிராமாக இருந்தால்.

சர்வர்: அப்படி இருக்காது. அப்படி இருந்தால் நீங்கள் 19 பைசா கொடுத்தால் போதும். நாங்கள் இட்டிலிகளை நிறுத்துப் பார்த்து விட்டுத்தான் உங்களுக்குக் கொண்டு வருவோம்.

பொதுஜனம்: இட்டிலி எடை சரியாக இருக்கிறது என்று நாங்கள் எப்படி நம்புவது?

சர்வர்: உங்களுக்குச் சந்தேகமாக இருந்தால், எதிரே மத்தியஸ்தர் கடை இருக்கிறது. அவரிடம் எடுத்துக் கொண்டு போங்கள். அவர் நிறுத்துப்




பார்த்து ஒரு சீட்டுக் கொடுப்பார். அதை நாங்கள் ஒப்புக் கொள்ளுவோம்.

பொதுஜனம்: நிறுத்துச் சொல்வதற்காக அவர்களுக்குக் காசு கொடுக்க வேண்டாமா?

சர்வர்: நூறு கிராமுக்கு ஐந்து பைசா, அவ்வளவுதான்.

பொதுஜனம்: அந்த மத்யஸ்தர் கடை நீங்கள்தான் வைத்திருக்கிறீர்களா?

சர்வர்: வெகு சாமர்த்தியசாலியாக இருக்கிறீர்களே, நாங்கள்தான் வைத்திருக்கிறோம்.

பொதுஜனம்: சரி, இரண்டு இட்டிலி சாம்பார் கொண்டு வா. இரண்டு இட்டிலிகளும் சாம்பாரில் மிதக்க வேண்டும். அத்தனை சாம்பார் போடு.

[சர்வர் இரண்டு இட்டிலிகளை ஒரு தனித் தட்டிலும் துளி சாம்பாரை இன்னொரு தட்டிலும் கொண்டு வருகிறான்.]

பொதுஜனம்: என்ன, சாம்பாரைத் தனியாகக் கொண்டு வந்திருக்கிறாய்?

சர்வர்: சாம்பாரை இட்டிலியின் மீது ஊற்றி விட்டால் பின் நீங்கள் அதை எப்படி நிறுத்துப் பார்ப்பீர்கள்! அதற்காகத்தான் ஊற்றவில்லை. இந்த இரண்டு இட்டிலி 110 கிராம்.

பொதுஜவம்: சரி, 110 கிராம் என்று ஒப்புக்கொள்ளுகிறேன். ஆமாம், சாம்பார் ஏன் இத்தனை குறைவாக இருக்கிறது?

சர்வர்: இத்தனை அளவு சாம்பார்தான் கொடுக்க வேண்டும் என்று அரசினர் இன்னும் உத்தரவு போடவில்லையே! பரவாயில்லை, சாப்பிடுங்கள், மேற்கொண்டு சாம்பார் தேவையென்றால் கொண்டு வந்து தருகிறேன்.

[பொதுஜனம் சாப்பிட ஆரம்பிக்கிறார்.]

பொதுஜனம்: ஐயையோ! உறைப்புத் தாங்கவில்லையே! சாம்பாரை இத்தனை உறைப்பாகவா செய்வார்கள்!

சர்வர்: சாம்பாரில் இத்தனை உறைப்புத்தான் போட வேண்டும் என்று அரசினர் ஓர் உத்தரவும் போடவில்லையே!

பொதுஜனம்: யாரும் அதிக சாம்பார் கேட்கக் கூடாது என்று இத்தனை காரமாகச் செய்திருக்கிறீர்களா!

சர்வர்: அப்படித்தான் வைத்துக்கொள்ளுங்களேன்! நீங்கள் பாய்க்குள் பாய்ந்தால், எங்களுக்குத் தடுக்குக்குள் பாயத் தெரியாதா?

# கலைச் செல்வர் ராஜ்!



உறுதியான பாறைக்கல்லில் சிற்பம் செதுக்குவது அதிசயமில்லை. உதிர்ந்து போகக் கூடிய சாக்குக் கட்டியில் தெய்வ உருவங்களை அற்புதமாகப் படைத்து விடுகிறார் ஒரு சில விநாடிகளில் இந்தக் கலைஞர்.

தெய்வ உருவங்களை மட்டுமல்ல, முப்பது நிமிஷங்களில் நீங்கள் உங்கள் உருவத்தையே அந்தச் சாக்குக் கட்டியில் காண்பீர்கள்!

நாச்சியார் கோயிலை ஒட்டியுள்ள போன்ற மாத்தூர் கிராமத்தில் பிறந்த செல்வன் செல்வராஜ் ஒரு விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்தவர். குடும்பச் சூழல் பி. ஏ. முதலாண்டுப் படிப்போடு இவரைப் படிப்புக்கு முற்றுப்புள்ளி வைக்க வைத்துவிட்டது. ஆனால் கலை ஆர்வம் இவர் கைக்கு முற்றுப் பெறாத வேலை கொடுத்துக் கொண்டே இருக்கிறது.

சாக்குக் கட்டியில் சிலை செதுக்குவது என்றால், இவருக்குப் பதினைந்து நிமிஷங்கள்கூடப் பிடிப்பதில்லை. பிளாஸ்டர் ஆஃப் பாரிசில் பதிப்பதென்றால் ஒரு மணிநேரம் பிடிக்கிறது. இவரது கைவண்ணத்தில் தெய்வச் சிலைகளும் மனித உருவங்களும் போட்டி போட்டுக் கொண்டு உருவாகின்றன. அந்தக் கலை வண்ணம் பார்க்கப் பிரமிப்பை ஊட்டுகிறது. -- ரா. வி.

---

பொதுஜனம்: இத்தனை எடைக்காகப் பேசுகிறீர்களே, ஏன் விலைப் பட்டியலுக்குப் பக்கத்தில் எடைகளையும் குறிப்பிடவில்லை!

சர்வர்: உங்கள் அரசினர் உத்தரவு போடாததால் குறிப்பிடவில்லை.

பொதுஜனம்: பின் எந்தத் தின்பண்டம் எத்தனை எடை இருக்க வேண்டும் என்று நாங்கள் எப்படிக் கண்டுபிடிப்பது?

சர்வர்: என்னைக் கேளுங்கள், சொல்லுகிறேன்.

பொதுஜனம்: மைசூர் போண்டா என்ன விலை?

சர்வர்: ஒரு கிராம் 2/3 பைசா, அதாவது மூன்று கிராம் மைசூர் போண்டா, 2 பைசா. அதாவது 60 கிராம் போண்டா 40 பைசா.

பொதுஜனம்: சரி, இரண்டு மைசூர் போண்டா கொண்டு வாருங்கள்.

சர்வர்: நாங்கள் போண்டா தயாரிப்பதில்லை.

பொதுஜனம்: ஏன்?

சர்வர்: கிராம் 2/3 பைசா என்று வருவதால், அதைக் கணக்குப் பார்க்க கஷ்டமாக இருக்கிறது.

பொதுஜனம்: சரி, ஒரு தோசை கொண்டு வாருங்கள்.

சர்வர்: அதையும் நாங்கள் தயாரிப்பதில்லை. ஒரு கிராம் 3/8 பைசா என்று வருவதால், அதை நாங்கள் எப்படிக் கணக்குப் பார்ப்பது?

பொதுஜனம்: சரி, ரவா உப்புமா!

சர்வர்: அது ஒரு கிராம் 7/20 பை என்று வருகிறது. அதனால் கிடையாது.

பொதுஜனம்: பொங்கல், மெதுவடையாவது உண்டா?

சர்வர்: இரண்டும் கிடையாது. பொங்கல் கிராம் 7/26 பைசா ஆகிறது. வடையோ கிராம் 2/3 பைசா ஆகிறது.

பொதுஜனம்: பின் என்னதான் வைத்திருக்கிறீர்கள்? பூரி மசாலாவாவது உண்டா, இல்லையா?

சர்வர்: கட்டாயம் உண்டு. இதோ கொண்டு வந்து தருகிறேன்.

[இரண்டு பூரியும் மசாலாவும் கொண்டு வருகிறான்.]

பொதுஜனம்: என்ன மசாலாவில் ஒரே வெந்த வெங்காயம் மசால் போட்டிருக்கிறீர்கள், அதை மசாலாவோடு கலக்காமல் வேறு வைத்திருக்கிறீர்கள்?

சர்வர்: நாங்கள் என்ன பண்ணுவோம்! மசாலா 80 கிராம் இருக்க வேண்டுமென்று அரசினர் உத்தரவிட்டிருக்கிறார்கள். நான் நிறுத்துப் பார்த்த போது மசாலா 76 கிராம் தான் இருந்தது. அதனால் 4 கிராம் வெந்த வெங்காயம் சேர்த்தேன். அவசரத்தில் கலக்க மறந்து விட்டேன்.

பொதுஜனம்: அப்படியா! ஒரு பூரியை ஒரு பக்கம் கத்தரிக்கோலினால் கத்தரித்து எடுத்திருக்கிறீர்களே, ஏன்!

சர்வர்: இரண்டு பூரி 40 கிராம் இருக்க வேண்டுமென்று அரசினரின் உத்தரவு. நிறுத்துப் பார்த்தபோது 46 கிராம் இருந்தது. அதனால் ஒரு பூரியில் ஒரு பகுதியைக் கத்தரித்து எடுத்து விட்டேன்.

பொதுஜனம்: கத்தரிப்பானேன்? இட்டிலிக்கு விலை போட்டது போல் கூடுதல் விலை போடுகிறது?

சர்வர்: அது கஷ்டம், இரண்டு பூரி, மசாலா 35 பைசா என்று சொல்லும்போது, பூரி ஒரு கிராம் என்ன விலை, மசாலா ஒரு கிராம் என்ன விலை என்று கண்டுபிடிப்பது கஷ்டம்.

பொதுஜனம்: சரி, காப்பி கொண்டு வாருங்கள்.

சர்வர்: 140 மில்லி 30 பைசா, சம்மதந்தானே?

பொதுஜனம்: என்ன, சாராயத்தைப் போல, மில்லி, கில்லி என்று சொல்கிறீர்கள்?

சர்வர்: நாங்கள் என்ன செய்யலாம்? அரசினர் போட்ட கணக்கு!

பொதுஜனம்: காப்பி அளவு சரியாக இருக்குமா?

சர்வர்: காப்பி 150 மில்லியே இருக்கும்.

பொதுஜனம்: எப்படி!

சர்வர்: என்ன இப்படிக் குடைந்து, குடைந்து கேட்கிறீர்கள்! அடுப்பில் ஒரு பாத்திரத்தில் எப்பொழுதும் வெந்நீர் காய்ந்து கொண்டே இருக்கிறதே, எதற்கு?

# காலங்களில் அவள் வசந்தம்

நல்ல கவிதை நடையில் படத்துக்குத் தலைப்பைக் கொடுத்துவிட்டு, திரைக் கதையை அலங்கோலப்படுத்தி விட்டார்கள்.

மூத்தவள் ராஜிக்கு வந்த வரன்கள் எல்லாம் தட்டிப் போய் விடவே, இளையவள் கல்பனாவுக்கு மணம் முடித்து வைக்கப்படுகிறது. அவள் தன் காதலன் ரவியையே மணந்து கொள்கிறாள். ராஜிக்குக் கல்யாணப் பைத்தியம் பிடித்து விடுகிறது. மனம் முறிந்த அவர்களது தந்தை இறந்துவிடுகிறார். அப்புறம்தான் திரைக் கதைக்குப் பைத்தியம் பிடிக்கிறது. பைத்தியக்கார அக்காவைக் குணப்படுத்த, தங்கை ஒரு பைத்தியக்காரத்தனமான முடிவுக்கு வருகிறாள் — தன் கணவன் ரவியையே தன் அக்கா ராஜியை மணந்து கொள்ள வற்புறுத்தி வெற்றியும் பெறுகிறாள். ரவியை மணந்து கொண்டு இல்லற இன்பம் துய்த்தபின் ராஜிக்குப் பைத்தியம் தெளிந்து விடுகிறது. (ஆனால் நமக்குப் பைத்தியம் அதிகமாகி விடுகிறது!) அவள் தங்கையின் இன்ப வாழ்க்கைக்குக் குறுக்கே நிற்க விரும்பாமல் மறுபடியும் பைத்தியமாக நடித்து ஊரை விட்டே போய் விடுகிறாள்...!

ஏன் இப்படி யெல்லாம் கதை பண்ணுகிறார்கள்! மனத்தில் கொஞ்சம்கூடத் தங்காத பாத்திரங்களைப் படைத்துப் படத்தைத் தயாரித்துவிட்டு 'ஒரு வாரம்கூடத் தமிழ்ப் படம் ஓடவில்லையே' என்றால் எப்படி ?

நடிப்பாற்றலில் எவ்விதக் குறையும் இல்லை.

இப்படத்தில் ஸ்ரீ வித்யா அக்காள் : சந்திரகலா தங்கை. இருவரும் அற்புதமாக நடித்திருக்கின்றனர் என்றாலும், — ஸ்ரீ வித்யாவின் நடிப்பு தத்ரூபமாயிருக்கிறது. சித்தப் பிரமை பிடித்த பிறகு அவர் நடிப்பில் நமக்கொரு பிடிப்பு ஏற்படுகிறது. அது கடைசிக் காட்சி வரையில் நிறைவைத் தருகிறது. ஏக்கப் பார்வையும், கல்யாணம் என்றதும் ஏற்படும் குதூகலமும், கடைசியில் சித்தம் சரியானதும் நடந்தவற்றையெல்லாம் அறிந்து கண்களில் நீர் பொங்க விம்மி விம்மி அழுததும் ஏ ஒன் !

கதாநாயகன் முத்துராமனுக்கு அதிக வேலை இல்லை. என்ன செய்வார், பாவம் !

இடையில், இன்னும் ஒரு பைத்தியக்காரத்தனம்! தங்கை, தன் கணவனையே அக்காளுக்குக் கொடுத்துவிட்டு அவனுக்குத் தெரியாமலே விவாகரத்துக்கு ஏற்பாடு செய்து கொள்கிறாளாம்! என்ன பிதற்றல்! விவாகரத்துக்கு, கணவனும் மனைவியுமாகச் சேர்ந்துதானே ஏற்பாடு செய்து கொள்ள வேண்டும்?

சில படங்களில், திரைக்கதை அசடுவழிந்தாலும், நகைச்சுவைப் பகுதி ஒருவாறு கை கொடுக்கும். இதில், நகைச்சுவைப் பகுதி... ஐயோ பாவம்!

எஸ். பி. முத்துராமன் டைரக்டர் என்ற முறையில் தம் பணியை நன்கு புரிந்திருக்கிறார். ''காலங்களில் அவள் வசந்தம்'' : கற்பனையில் கோடை வறட்சி. — சாந்தன்



"அம்மா, நானும் ரொம்ப நாளா ஆலோசிச்சிண்டு இருக்கேன். ஒனக்கு வயசு எம்பதாகப் போறது. ஒன்னைத் தனியா ஊர்லே விட்டுட்டுப் பெங்களூர்லே எங்களாலே நிம்மதியா இருக்க முடியலே" என்றார் ராமசாமி.

"ஒங்கப்பாவுக்கு வாழ்க்கைப்பட்டதிலே யிருந்து எழுபது வருஷமா இந்த ஒழுகினசேரி கிராமத்திலேயே வாழ்ந்துட்டேண்டா. இப்ப ஜீவன் போகப் போற சமயத்துலே பெங்களூரும் எனக்கு எதுக்கு? நீ என்னைப் பத்திக் கவலைப்படாதே. ஊரிலே எத்தனையோ பேர் இருக்கா. என்னைப் பார்த்துப்பா."

"அம்மா, அம்பதும் அறுபதும் வயசான எங்களுக்காக நீ இன்னமும் கவலைப்படறே. உனக்கு ஒரு தலைவலி வந்துட்டா எங்க மனசு என்ன பாடுபடறது? எங்களோட வந்துடு அம்மா."

"அந்தக் காலத்திலேயே நீ பெரிய பிடி வாதக்காரண்டா. என்னை விட



மாட்டே போல் இருக்கே? நான் ஆலோசிச்சுப் பார்க்கிறேன். அப்புறமா சொல்றேன்."

"சரியம்மா."

"ராமசாமி, நீ ஆத்திலே இருந்துக்கோ. நான் செத்த நாழி வெளியிலே போய்ட்டு வாறேன்."

"ஏண்டி குமரி, ஒன்னைக் காணலியே இத்தனை நேரமாக் காலம்பற? நான் ஒங்க வீட்டுக்கு வரலாம்னு பார்த்தேன். அதுக்குள்ளே நீ வந்துட்டே."

"இல்லேடி முத்து! ராமசாமி ஏதோ காலம்பறப் பேசிண்டிருந்தான். திடீர்னு தன்னோட பெங்களூர் வரும்படியாச் சொல்றான். நான் இந்த வயசுலே தனியா ஊர்லே இருக்கிறது அவனுக்கு அங்கே கவலையா இருக்காம். எனக்கு என்ன சொல்றதுன்னு தெரியல்லே."

"ஒண்ணு கேக்கறேன் குமரி. உன் நாட்டுப் பெண் கமலா எப்படி?"

"பணக்கார வீட்டுப் பெண்; ஆனாலும் தங்கம்டி அவ."

"அப்படின்னாப் புள்ளையோட போறது தான் சரி. எனக்கோ புள்ளையில்லே, கொள்ளி வைக்கக்கூட. பொன்னுத்திலே கஞ்சி குடிக்கிறேன். ராஜாவாட்டமாப் பையன் சம்பாதிக்கிறப்போ நீ அவனோட போறதுதான் சரின்னு எனக்குப் படறது. அவாளும் ஒட்டுறவோட இருக்கா."

"என்னமோடியம்மா. ஒரே கொழப்பமா இருக்கு."

# ஓடிக்கொண்டேயிருக்கிறது

அம்பாமூர்த்தி

''குமரி, என்னோட கஷ்டங்களை, ஆற்றாமையை எல்லாம் மனசு விட்டுச் சொல்றதுக்கு நீ ஒருத்தி மாத்திரம்தாண்டி இருக்கே. நீ ஊரைவிட்டுப் போய்ட்டா என் மனசுக்குள்ளே அதைப் பத்தி வெச்சுக்க வேண்டியதுதான்.''

''பைத்தியமே! இத்தனை வயசாகிறது. அழாதேடி. பெங்களூருக்குப் போன்னு நீதான் சொல்லறே. உடனேயே போனும் உனக்குக் கஷ்டமா இருக்குமேன்னு அழறே. நானும் எல்லாத்தையும் நன்னு ஆலோசிச்சிட்டுத்தான் ராமசாமிகிட்ட நாளைக்குச் சொல்லப் போறேன். வர்றேன், முத்து.''

பத்தாயத்தில் போய்ப் படுத்துக்கொண்ட குமரிப் பாட்டிக்கு ஒரு முடிவுக்கு வருவதே கஷ்டமாக இருந்தது. வெகு நேரம் மூளையைப் போட்டுக் குழப்பிக் கொண்டாள்.

''ராமசாமி, என்னடா இப்பத்தான் தூங்கி முழிச்சியா ?''

''ஆமாம்மா.''

''டேய், நீ சொன்னதை நன்னு யோசனை பண்ணிப் பார்த்தேன். நானும் ஒங்களோட வர்றதா முடிவு செஞ்சுட்டேன்.''

''ரொம்ப நல்லதும்மா. எங்கே நீ வேறே ஏதாவது சொல்லப் போறயோன்னு பயந்துண்டு இருந்தேன். அடியே கமலா, அம்மா நம்மகூட வர்றாடி. லதா, லதா, பாத்தி நம்மகூட டிரெயின்லே வருவா, இனிமே தெனம் பாட்டி நேவித்தியம் பண்ற பாலெல்லாம் நோக்குத்தான்.''

''ஐயா பாத்தி, ஐயா பாத்தி.''

''அம்மா, இன்னிக்குத்தான் மத்தியானம் ஆபீஸிலேயிருந்து கடிதாசு வந்தது. ஏதோ அவசர வேலையாம். என்னைச் சீக்கிரம் வரச் சொல்லியிருக்கா. நாளன்னிக்கு மத்தியானம் எக்ஸ்பிரஸ் பஸ்ஸிலே திருநெல்வேலிக்கு டிக்கெட் கிடைக்கிறதான்னு பார்க்கிறேன். அங்கிருந்து திருச்சி போய்ட்டு இன்னொரு ரயிலேறி பெங்களூர் போகணும். உனக்கும் சேர்த்து டிக்கெட் வாங்கறேன். இப்பவே மீனாட்சிபுரம் பஸ் ஸ்டாண்டு வரை போய்ட்டு வர்றேன்.''

''நானும் வதேன் அப்பா !''

ராமசாமியின் கையைப் பிடித்தபடி லதா போவதைப் பார்த்துக் கொண்டிருந்தாள், குமரிப் பாட்டி. இன்னும் இரண்டே நாட்களில் போக வேண்டியதுதான். ஒழுகின சேரியை விட்டு. என்ன இருக்கிறது இந்த ஊரில் என்று எத்தனையோ தரம் பாட்டி சலித்துக் கொண்டிருக்கிறாள். ஆனால் பிரியப் போகிறோம் என்று நினைக்கிறப்பத்தான் ஊரோட அழகு புரியறது.

காலை மணி ஐந்து. முனிசிபல் பார்க்கின் சைரன் ஊதுகிறது. பாட்டி எழுந்திருக்கிறாள்.

''ராமசாமி, கதவைச் சாத்திக்கோ. நான் ஆத்தங்கரைக்குப் போய்க் குளிச்சிட்டு வர்றேன்.''

படித்துறைக்குப் பக்கத்திலே இருக்கும் விளக்கு வேறு அழுது வடிகிறது. இருட்டில் பார்த்துப் பார்த்துத்தான் கால்களை எடுத்து வைக்க வேண்டும். தண்ணீருக்குள் இறங்குகிறாள். ஜில்லென்றுதான் இருக்கிறது.

''என்ன பாட்டி, நேத்திக்கு முழுக்க வெளியிலேயே காணலியே ? புள்ளையெல்லாம் வந்திருக்காளோ ?'' எதிர்த்த வீட்டுப் பகவதி தான் குளிக்க வந்து கொண்டிருக்கிறாள்.

''ஆமாம், பகவதி.''

''பாட்டி, ஒரு நல்ல சமாசாரம். நம்ப பார்வதியைப் போன வாரம் பெண் பார்த்துட்டுப் போனானே திருவனந்தபுரத்திலிருந்து. அந்தப் பையனுக்கு அவளைப் புடிச்சிருக்காம். நாளன்னிக்கு நிச்சயதாம்பூலம் வெச்சுக்கலாம்னு சொல்லியிருக்கா.''

''ஒனக்கு ஒரு பாரம் விட்டுதுடி பகவதி.''

இருபத்து மூன்று வயதான பார்வதிக்குக் கடந்த மூன்று வருடங்களாகக் கல்யாணத்துக்குப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்... கடவுள் கிருபையில் ஓர் இடம் திகைந்ததா ?

''பாட்டி, எங்க வீட்டிலே இதுதான் முதல் கல்யாணம். பெரிய மனுஷான் ஒருத்தரும் வீட்டிலேயும் இல்லை. ஒங்களைத்தான் முழுக்க நம்பியிருக்கேன். சித்திரை மாசத்திலே முகூர்த்தம் வெச்சுக்கலாம்னு இருக்கோம்.''

''பகவதி, ரொம்ப சந்தோஷம்மா. மத்தியானமா நான் உங்க வீட்டுக்கு வர்றேன். ஆனால் நான் புள்ளையோட நாளைக்கு பெங்களூருக்குப் போறதா இருக்கேன். கவலைப் படாதே. எல்லாம் மங்களமா நடக்கும்.''

''என்ன பாட்டி, நீங்க இருந்து பார்வதி கல்யாணத்தை நடத்தி வைப்பேன்னு நெனச்சேன்.''

''கல்யாணம்கிறது மனுஷா நடத்தி வைக்கிற விஷயமா பொண்ணே ? அந்தப் புவனேசுவரி அம்மன் எல்லாத்தையும் பார்த்துப்பாள். திடமா இரும்மா. சரி ! நான் வர்றேன்.''

கோவில் மணி அடிக்கிறது. கிருஷ்ண வாத்தியார் வந்து விட்டார். ஈரப் புடவையோடு பாட்டி கோவிலுக்குள் நுழைகிறாள்.

''என்ன பாட்டி, வாங்கோ.''

''நீ வந்தாச்சா கிருஷ்ணு ?''

''ஆமாம் பாட்டி. நீங்கதான் அஞ்சரை மணிக்கு வருவேளே ? அதுக்கு முன்னாடி நான் இருக்க வேண்டாமோ ? நாளைக் கழிச்சு முதல் வேறு மெள்ள வரலாம். நீங்களோ ஊரை விட்டுப் போறேள். வேறே ஒருத்தரும் ஏழு மணிக்கு முன்னாடி தலை காட்டறதில்லே.''



**"என்னப்பா கைக்குட்டையிலே முடிச்சு?"**

**ஒரு காரியம் நினைச்சுண்டேன்; அது மறந்து போகாமலிருக்க முடிச்சு போட்டுண்டேன்."**

**"அடடா; நீதான் நினைத்ததை முடிப்பவன்!"**

—வெங்கட் எழுதிய 'என் கேள்விக்கென்ன பதில்' நாடகத்தில் ஒரு ஜோக். —தகவல் ராமு

■○■○■○■○■○-■-○■○■○■○■○■

"நான் போகப் போறதை யாருடா உன்கிட்டச் சொன்னு?"

"ராமசாமி அண்ணுவோட நேத்திக்கிப் பேசிண்டிருந்தேன். பாட்டி, தெனம் பழையாத்துலே குளிச்சுப் புவனேசுவரியை நமஸ்கரிச்சு எங்களுக்கு இத்தனை வருஷமாப் பழக்கமாயிடுத்தே. திடீரென்று புது ஊரிலே போய் இதை எல்லாத்தையும் மறந்துட்டு எப்படி இருப்பேன்?"

"அதுதான் நேக்கும் பயமா இருக்கு. அவதான் நேக்கு தைரியம் கொடுக்கணும்."

தீபாராதனை வெளிச்சத்தில் அம்மனின் முகம் பளிச்சிடுகிறது. வீட்டுக்கு வந்து பூஜையை முடித்து எழுந்திருக்கும் போது மணி எட்டரையாகிறது.

"அம்மா! எல்லோருக்கும் டிக்கெட் வாங்கியாச்சு. தற்செயலா நேத்திக்கி பஸ் ஸ்டாண்டிலே மூன்ணுலே அடுத்த வீட்டிலே இருந்தாரே சேஷய்யர், அவரோட பேரனைப் பார்த்தேன். கலெக்டர் ஆபீஸிலே ஜோலியா இருக்கானும். மதுரையிலே இருந்து இப்போதான் டிரான்ஸ்பர் ஆகி வந்திருக்கான். அவனுக்கு வீடு வேணுமாம். நம்ப வீட்டை எடுத்துக்கிறதாகச் சொல்லியிருக்கான். மாசம் இருபத்தஞ்சு ரூபாய் தர்ருனும்."

"சரி, ராமசாமி."

"அம்மா! உன்னோட சாமானெல்லாம் இன்னிக்கே எடுத்து வெச்சுண்டுடு. நாளைக்கு டாக்ஸி வரச் சொல்லியிருக்கேன். வீட்டிலேயிருந்து மத்தியானம் பன்னிரண்டு மணிக்குப் புறப்படணும். சரியாம்மா?"

"எடுத்து வைச்சுக்கிறேண்டா."

நான்கு நார்முடிப் புடவைகள், கங்கா தீர்த்தச் சொம்பு இரண்டு — இவ்வளவு தானே எடுத்துக் கொள்ள வேண்டும்? வேறு என்ன சொத்து இருக்கிறது இந்தக் கிழவிக்கு? ஆத்திலுள்ள மீதி தட்டுமுட்டுச் சாமான்களை யெல்லாம் பத்தாயத்துக்குள் போட்டுப் பூட்டிவிட்டுப் போக வேண்டியதுதான். இதையெல்லாம் பெங்களூருக்கு யார் கொண்டு போவார்கள்?

குமரிப் பாட்டிக்கு 'நேரம் பறப்பதைப் போல் இருக்கிறது. ஊரில் எல்லாரிட்டேயும் சொல்லிக் கொண்டாகிவிட்டது. நாளைக்குப் புறப்பட வேண்டியதுதான். இராத்திரி மணி ஒன்பது. கஞ்சியைக் குடித்துவிட்டுப் படுத்துக் கொள்கிருள். ஏதோ புத்தகம் படித்துக் கொண்டிருந்த ராமசாமியும் பெட்ஷீட்டை விரிக்கிருர். வாசற் கதவை யாரோ தட்டுகிருர்கள். ராமசாமி கதவைத் திறக்கிருர். பயமும் கலவரமும் நிறைந்த முகத்தோடு ஒரு பெண், சுமார் பத்து வயது இருக்கும், நிற்கிருள்.

"என்னம்மா வேணும்?"

"எங்கம்மாவுக்கு இடுப்பை வலிக்கிறதாம். ரொம்ப அழுரு மாமா! பாட்டியை உடனே கூட்டிண்டு வரச் சொன்னு."

குமரிப் பாட்டியே எழுந்து வருகிருள்.

"என்னடீ ராதா, அம்மாவுக்கு இடுப்பு வலிக்கிறதா? இதோ வர்றேன். போகலாம். வா."

"சீக்கிரம் வந்துடும்மா நாளைக்கு முழுக்க ரயில்லே உட்கார்ந்திருக்கணும். ராத்திரி ரொம்பத் தூக்கம் முழிச்சாக் கஷ்டமாக இருக்கும்."

"முடிஞ்சவரை சீக்கிரம் வர்றேண்டா."

"வாங்கோ பாட்டி, மன்னிச்சுடுங்கோ. ஒங்களைத் தொந்தரவு பண்ணப் படாதுன்னுதான் நெனச்சேன். வலி தாங்க முடியாம ஆயிடுத்து. இந்த ரெண்டு குழந்தைகளும் நான் அழறதைப் பார்த்துக் கதறுகின்றன. பக்கத்துலே யாராவது இருந்தால் எனக்கும் மனசு தைரியமா இருக்கும் போலத் தோணித்து. உங்களை...."

"முடிஞ்சவரை பொறத்தியாருக்கு உதவி செய்யறதைத் தவிர இந்த வயசுலே நான் வாழறதுக்கு என்னம்மா அர்த்தம்? நான்தான் வந்துட்டேனே. தைரியமா இரு. ரொம்ப வலிக்கிறதா அம்மா?"

"ஆமாம், பாட்டி."

கடந்த ஆறு மாதங்களாக ஊரே ஒதுக்கிய ஒரு ஜீவனுகிவிட்டாள் சீதா. பம்பாயில் வேலை பார்க்கிருன் அவள் புருஷன். பம்பாயில் பெண்டாட்டி குழந்தைகளை வைத்துக் குடித்தனம் நடத்தச் சம்பளம் போதாது. வருஷத்துக்கொரு முறை லீவில் ஊருக்கு வந்துவிட்டுப் போவான். சீதாவும் பல வீடுகளில் எடுபிடி வேலை பார்த்துக் கொஞ்சம் சம்பாதித்தாள். அவள் நல்ல பெண்தான். எந்தச் சபல நேரத்தில் என்ன ஆச்சோ, அவள் கணவன் வந்துவிட்டுப் போன ஆறு மாதங்களுக்குப்பின் தாய்மையாகப் போகிற பொலிவு சீதாவின் முகத்தில் தெரிய ஆரம்பித்தது. வயிறு வரப் போவதற்குக் கோடி காட்டியது. அப்போதுதான் சீதா தன்னைக் கணவன் இல்லாத நேரத்தில் யாருக்கோ இழந்திருக்கிருள் என்பது ஊருக்குத் தெரிந்தது. அன்று முதல் ஊராரால் ஒதுக்கி வைக்கப்பட்டு வாழ்கிருள் சீதா. ஒருவரும் அவளிடம் பேசுவதில்லை. சீதாவும் எதற்காகவும் கிராமத்தில் யாரிடமும் வருவதில்லை. பாவம்!

"சீதா, அழாதேயம்மா. சாமியை நெனச்சுக்கோ. வலி குறையும்."

காலை மணி ஆறரை இருக்கும். செக்கச் செவேலெனப் பிறந்தது குழந்தை.

"சீதா, ராஜா மாதிரி ஆம்பிளைப் பயல் பொறந்திருக்கான். கொழந்தையைப் பாரும்மா."

"இப்படி ஒரு கொழந்தை பொறக்கணும்னு நேக்கு ஏன் விதிச்சதோ தெய்வம்?"

# கோடையைக் குளுமையாக்க
# கோகுல் 'ஸான்டால்'

காலையும், மாலையும், எப்பொழுதும்
புத்துணர்ச்சியுடன் திகழ
உங்கள் உடலுக்கு கோகுல்
ஸான்டால் டாய்லெட் பவுடரை
உபயோகியுங்கள். தூய சந்தனம்,
வெளிநாட்டு வாசனைத் திரவியங்கள்,
பலவித இயற்கை மூலிகைகள்
கலந்து பிரத்யேக, 'மைக்ரோ-பைன்'
முறையில் தயாரிக்கப் படுவது
கோகுல் ஸான்டால் டாய்லெட் பவுடர்.
சந்தனக் கலவையுள்ளதால்
வேனில் கட்டி, வேர்க்குரு
வராமல் சருமத்தைப்
பாதுகாக்கிறது,
கோகுல் ஸான்டால்
டாய்லெட் பவுடர்.






**கோகுல்**
ஸான்டால்
டாய்லெட் பவுடர்
**டி.எஸ்.ஆர் & கம்பெனி,**
**மதராஸ்**
பிரத்யேக தயாரிப்பு

**டி.எஸ்.ஆர் & கம்பெனி,**
**மதராஸ்**
ராமாவரம்,
மதராஸ்-600 089.

ADWAVF/TSR 445A

## இவர்களில் ஒருவர் ஆடும் போது மற்றொருவர் சினிமா எடுப்பார்!



அமிர்தராஜ் சகோதரர்கள் அயல் நாடுகளில் டென்னிஸ் ஆடும்போது ஒருவர் ஆடுவதை மற்றவர் யாராவது சினிமா எடுக்கிறார்கள். இந்தியாவுக்கு வந்து போட்டுப் பார்க்கிறார்கள். இதனால் அவர்கள் ஆட்டத்தில் உள்ள குறைகளைச் சரிசெய்து கொள்ள முடிகிறதாம். - ஜே.எஸ். - பாபு

''சீதா! இப்ப சொல்றேன் கேட்டுக்கோ. நீ வேண்டாம்னு சொல்லும் இந்தக் கொழந்தைதான் பெரியவனாகி உன்னை ராணி மாதிரி வெச்சுக்கப் போறான். அப்போது என்னை நெனைச்சுக்கோ.''

''பாட்டி! நீங்க தெய்வம் பாட்டி. பாவி நான் இரவு முழுக்க ஒங்களைத் தூக்கம் முழிக்க வெச்சுட்டேன். நீங்க மட்டும் இருந்திருக்காட்டா என்னோட கதியே எப்படி ஆகியிருக்குமோ தெரியலே.''

''பொண்ணே சமாதானமா இரு. அது சரி, ராதைக்கு இன்னிக்குச் சமையல் பண்றதுன்னாக்கஷ்டம். பாவம் பதறிப் போயிருக்கும் பெண். எங்கள் வீட்டிலேயிருந்து ஒங்களுக்குச் சாப்பாடு அனுப்பறேன். ராதே, நீ சமையல் பண்ணாதே. இப்போ அம்மாவுக்குச் சூடா ஒரு கப் காப்பி மட்டும் போட்டுக் கொடு.''

''நீங்களும் குடிச்சுட்டுப் போங்கோ பாட்டி.''

''சரியம்மா. ஆண் பிள்ளைப் பயல் பொறந்திருக்கான். மனசு சந்தோஷமா காப்பி குடிச்சுட்டுப் போறேன்.''

''பாட்டி! ஒங்களுக்கு எப்படி நன்றி சொல்றதுன்னே தெரியலே. ஊரே என்னைத் தள்ளி வெச்சுடுத்து. கொஞ்ச மாசங்களுக்கு முன்னாடி வரை என்னோட வம்பு பேசினவா, சினிமாவுக்கு வந்தவா, நான் ரொம்ப சிநேகிதம்னு நெனைச்சுண்டு இருந்தவா, எல்லாருமே நேக்கு இப்படி ஆனவுடனே ஏதோ ரோகி மாதிரி என்னை நெனைச்சுண்டு தள்ளிப் போக ஆரம்பிச்சா. என்னைப் பார்க்காதது மாதிரி அவா போறப்போ என் மனசு துடிக்கும் பாட்டி. நான் தப்பு செய்தது, தப்புகூட இல்லே, அது பாவம், உண்மைதான். ஆனால் அதுக்காக என்னைத் தண்டிக்கலாம். என்னோட பெண் ராதாவும் கொழந்தை குமாரும் என்ன பாவம் செஞ்சாளோ, ஊரிலே ஒரு கொழந்தை அவாகூட வெளையாடறதில்லே, பேசறதில்லே. அதைப் பார்க்கிறப்போதான் என்னோட கேவலமான ஒடம்பை நெனைச்ச நான் அழுவேன். நேத்திக்கு ராத்திரி ஒங்களைக் கூப்பிடறப்ப நேக்கு பயம்தான். நீங்களும் வரமாட்டேன்னு சொல்லிட்டா — என்ன பண்றதுன்னு புரியலே. பாட்டி, விழுந்து நமஸ்கரிக்க வேண்டிய தெய்வம் நீங்க. ராதா, குமார், பாட்டியை நமஸ்காரம் பண்ணுங்கோ, நேக்குப் பதிலா.''

''சீதா! ஒன் தலையெழுத்து இப்படி ஆயிடுத்து. சாமி மேலே பாரத்தைப் போடு. வரப் போற நாள் நன்னா இருக்கும். சரியம்மா காப்பி குடிச்சுட்டேன். வரட்டுமா? அப்புறம் பார்க்கலாம்.''

''போய்ட்டு வாங்கோ பாட்டி.''

குமரிப் பாட்டி புறப்படுகிறாள். ராதா பின்னோடு வருகிறாள். ''பாட்டி, அம்மாவுக்கு எல்லாம் சரியாயிடுத்தா பாட்டி?''

''ஆமாம்'' என்கிற பதில் கிடைக்க வேண்டுமே என்கிற தவிப்பும் பயமும் அந்தப் பிஞ்சு முகத்தில்!

''ஆமாண்டி கோந்தே. ஏதாவது வேண்டி வந்தா நம்ப வீட்டுக்கு வா. நான் உடனே வர்றேன்.''

''சரி பாட்டி.''

ஆத்தங்கரைக்குப் போய்க் குளித்துவிட்டு வீட்டுக்குப் போகிறாள் பாட்டி.

**''எ**ன்ன அம்மா, ராத்திரி போயிட்டுக் காலம்பற வர்றே?''

''அந்தப் பொண்ணுக்கு இடுப்பு வலி. துடிச்சுப் போயிட்டா. காலம்பறத்தான் ஆண் கொழந்தை பொறந்தது.''

''ராத்திரி கொஞ்சமாவது தூங்கினையோ?''

''அசடு. அவ புழுப்போலத் துடிக்கிறப்ப நான் எப்படிடா தூங்க முடியும்?''

''அம்மா, இன்னிக்கு ரயில்லே வேறே உட்கார்ந்திருக்கணும். உடம்பு அசதியா இருக்குமே அம்மா?''

''ராமசாமி, நேத்திக்கு ராத்திரி முழுக்க நான் ஆலோசிச்சேன். பெங்களூருக்கு நான் வந்தா என்ன பண்ணிடப் போறேன்? ஒன் பொண்டாட்டி சமைக்கிறதைச் சாப்பிட்டுட்டுக் கொழந்தைகளோட வெளையாடிண்டு நாள் முழுக்க ஒட்டணும். இங்கேயே நான் இருந்துட்டா யாருக்காவது பிரயோஜனமா வாழறோம் என்கிற திருப்தி எனக்கு இருக்கும். அதனாலே நான் ஒங்களோட வரல்லே.''

''அம்மா...!''

''ராமசாமி, என் பிடிவாதம் நோக்குத் தெரியாதா? நான் வரலேடா.''

''நீ வரணும்னு எங்களுக்கு ரொம்ப ஆசையம்மா.''

''எனக்கு அது நன்னாத் தெரியறது. ஆனா நெறையக் கடமை நேக்கு பாக்கி இருக்கு. வருத்தப்படாதே. எப்ப நேக்கு ஒன்னோட வரணும்னு தோணறதோ ஒடனே எழுதறேன். சரி ராமசாமி, அந்தப் பொண் சீதாவுக்குச் சமையல் நம்ப வீட்டிலே பண்ணி அனுப்பறேன்னு சொல்லியிருக்கேன். ஜோலியை ஆரம்பிக்கணும்.''

கோவில் தீபாராதனை மணி அடிக்கிறது. குமரிப் பாட்டி ஓடியாடி வேலை செய்கிறாள். பழையாற்றையும் புவனேசுவரி அம்மனையும், இந்த ஒழுகினசேரி கிராமத்தையும் விட்டுப் போகக் குமரிப் பாட்டிக்கு முடியவேமுடியாது.

## போட்டோ பேஜ்

"என்னமோ சினிமாவிலே டபுள் ரோலெல்லாம் நடிக்கிறாங்களாமே?"

புகைப்படம்:

ஆர். பி. எஸ். மணி



Printed and published by V. Vaidyanathan on behalf of M/s. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras - 600 031.
Managing Editor: T. Sadasivam
Associate Editor: K. Rajendran



சாதாரணப் பவுடர்களால் துலக்கும்போது
பிசுக்குகள் பின்தங்கிவிடக் கூடும்.



# தூய்மை பளிச்சிடத் துலக்குவது விம்

## 50% அதிக நுரைக்கும் சக்தி படைத்தது

துலக்குவதற்கான வேறெந்தப் பவுடரையும் விட மிக அதிக அளவு டிடர்ஜெண்ட் அடங்கியது விம். ஆகவேதான், அளவு-கடந்த நுரைவளத்துடன் பிசுக்குகளையும் கறைகளையும் அற்ப நொடியில் அகற்று-கிறது. பொடிக் கசடுகள் ஏதும் பின்தங்க விடுவதில்லை.

மேலும், மிக மிக மைசான பவுடராக இருப்பதால் கீறலே இல்லாத மழமழப்புக்கு உறுதிதருகிறது. தொட்டதை யெல்லாம் தூய்மை பளிச்சிடத் துலக்குவது விம்.

**பிசுக்கு இல்லை ! கீறல் இல்லை !**
**கசடு இல்லை !**







**விம்** மதிப்பு
உயர் மதிப்பு
இந்தப் பேக்
வாங்கினால் உமக்கு
25% க்கும் அதிகமாக
மிச்சமாகும்.

# மாசில்லாத பளபளப்பை வீசிட வைப்பது விம்.

இந்துஸ்தான் லீவரின் இத் தரமான தயாரிப்பு 600 கிராம் மற்றும் 2.5 கிலோ பேக்கிங்குகளில் கிடைக்கிறது.
உதிரியாக ஒருபோதும் கிடைப்பதில்லை.

---

லின்டாஸ்-V. 47-140 TM

REGISTERED No. M. 4392 இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
Registered as a Newspaper in Sri Lanka மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேசியா காசு

